# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

**பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிறார்கள் டாக்டர்கள்**



டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ்®

**விரைவான முழு வளர்ச்சிக்கான சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



பச்சிளம் தேகமும் மூளையும் வேகமாக வளரத் துடிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும் போதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து கெட்டி உணவுக்கு மாறவேண்டும்—மூன்றும் மாதமே; மென்றுதின்னப் பழக்குங்கள்...மேன்மையான வளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு ஃபாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் சீரண உறுப்புகளுக்கு உகந்தது.

**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்; காரணம்,**
தாய்ப் பால் விடுக்கும் தலையாய மாதங்களில் பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும் நிறைவுதரும் **ஒப்பற்ற சரிவிகிதச் சத்துணவு இதுவே.**

இரத்தச் செழிப்புக்கும் தென்புக்கும் நல்லுசிதமான அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச் சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும் தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும் உடலும் விரைந்து வளர உகந்த புரத சத்துக்கள்; வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி—இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே...

பாலூட்டும் பழக்கத்தை மாற்றுவதற்கான வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக அதிகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ்.

பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ்.

மென்றுதின்னப் பழக்க...கூடிய விரைவிலே குடும்ப உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...

**அதி உன்னதமான முதல் திட உணவு ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப் புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்—இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**

(புத்தகம், எந்த மொழியில் எனக்கு குறிப்பிட்டு) உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு: தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.




க்ளாக்ஸோ

LIL.GF. 53-140 TM




# கல்கி

1977 ஜனவரி 23
அநல வருடம்
தை 10





| | | | | | |
|---|---|---|---|---|---|
| 9 | 1 | 8 | 6 | 9 | 5 |
| 2 | 5 | 0 | 1 | 3 | 7 |
| 3 | 7 | 7 | 4 | 6 | 4 |
| 4 | 0 | 4 | 2 | 3 | 0 |
| 6 | 1 | 2 | 3 | 1 | 2 |
| 9 | 4 | 8 | 5 | 9 | 0 |



பக்கத்தில் உள்ள சதுரத்தில் சில எண்கள் இருக்கின்றன அல்லவா? இந்தச் சதுரத்தை ஆறு சம பாகங்களாக வெட்ட வேண்டும். ஒவ்வொரு துண்டும் ஒரே மாதிரி இருக்க வேண்டும். ஒவ்வொரு துண்டிலுள்ள எண்களின் கூட்டுத் தொகையும் சமமாக இருக்க வேண்டும். முடியுமா? - வி. பிரேமா


விடை 58-ம் பக்கம் பார்க்க

# சாகரத்தில் ஒரு சக்கரவர்த்தி!



வானம் அழுது கொண்டிருக்கிறது. அவ்வப்போது ஒரு மின்னல் தெறிக்கிறது. நாங்கள் இருபது பேர் ஒரு ஹெலிகாப்டரில் ஏறிச் சாகர் சம்ராட் நோக்கிப் புறப்படுகிறோம். பாரத அரசின் எண்ணெய் இயற்கை வாயுகமிஷனைச் சேர்ந்த பத்தொன்பது பொறி இயல், புவி இயல் நிபுணர்கள் 'ஸ்பான்' பத்திரிகைப் பிரதிநிதியாகிய நான் ஆக இருபது பேர். நடுக் கடலில் எண்ணெய்க் கிணறு உருவாக்கும் சாகர் சம்ராட் பம்பாயிலிருந்து வடமேற்கே 160 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது. என்னுடன் பயணப்படும் நிபுணர்கள் எல்லோரும் அடுத்த பதினாலு நாள் சாகர் சம்ராட்டிலேயே தங்கியிருப்பார்கள். அதன் பிறகு இரு வார விடுமுறையில் நிலப்பரப்பு திரும்புவார்கள்.

''உங்கள் பாடு தேவலாம். இரண்டு வாரங்களுக்கு ஒரு முறை பதினைந்து நாட்கள் விடுமுறை'' என்கிறேன்.

''அப்படிக் குதூகலப்படும்படி ஒன்றுமில்லை. குடும்பத்தை விட்டு இருவாரங்கள் சேர்ந்தாற்போல் பிரிந்திருப்பதும் சிரமம்; வீட்டிலேயே பதினைந்து நாட்கள் கழிப்பதும் கஷ்டம். ஆனால் எங்களுக்கு வேறு வழியில்லை. தினந்தோறும் வேலைக்குப் போய் வர ஹெலிகாப்டரைப் பயன்படுத்துவதென்றால் ரொம்பச் செலவாகும்.''

இவர்கள் பயன்படுத்தும் ஹெலிகாப்டர் நீர், நிலம் இரண்டிலும் இறங்கும். கனடாவைச் சேர்ந்த ஒரு நிறுவனத்துக்குச் சொந்தமானது. மாத வாடகை 80,000 டாலர்! இது தவிர இது பறக்கும் ஒவ்வொரு மணி நேரத்துக்கும் முந்நூறு டாலர் தரவேண்டும்.

''ஒரு ஹெலிகாப்டரை விலைக்கு வாங்கி விட்டால் மலிவாக இருக்கும்போலிருக்கிறதே'' என்கிறேன்.

''நடுக்கடலில் எண்ணெய்க்கிணறு அமைப்பதற்கு லட்சக் கணக்கான உபகரணங்கள் தேவை. ஒவ்வொன்றையும் விலைக்கு வாங்கிக் கொண்டிருக்க முடியாது'' என்று பதில் கிடைக்கிறது.

ஸாகர் ஸம்ராட் என்ற வார்த்தைகள் கீழே தெரிகின்றன. அதன் ஒரு பக்கமாக அமைந்துள்ள ஹெலிகாப்டர் தளத்தில் இறங்குகிறோம்.

சாகர் சம்ராட் உண்மையில் ஒரு கப்பலே. ஆனால் அது இப்போது நீர் மட்டத்திலிருந்து பல மீட்டர் உயரத்தில் இருக்கிறது. நான்கு கால்கள் கீழே இறங்கிக் கடல் படுகையை அடைந்து ஊன்றிக்கொள்ள, பிறகு சம்ராட் நீர்மட்டத்துக்கு மேலே உயர்ந்து கொண்டது.

இதன் மேல் தளத்தில் திரும்பின பக்கமெல்லாம் குழாய்களும், டியூப்களும், சிமெண்ட் மூட்டைகளும், பல ரகக் கருவிகளும் காணப்படுகின்றன. இரண்டு பிரும்மாண்டமான பாரம் தூக்கிகள் கனைத்துக் கொண்டே இயங்குகின்றன.

மற்ற எல்லா அம்சங்களையும் சிறுத்துப் போகச் செய்து கொண்டு ராட்சத எஃகுக் கோபுரம் ஒன்று உயர்ந்து நிற்கிறது. இது கப்பலின் மேல் மட்டத்திலிருந்து அறுபது மீட்டர் உயரம் இருக்கிறது. 'டெர்ரிக்' என்று இதற்குப் பெயர். இதுதான் எண்ணெய்க்காகப் பூமியைக் குடையும் இயந்திரம்.

புதிதாக வந்த குழுவினருக்கு உற்சாகமான வரவேற்புக் கிடைக்கிறது. முந்தைய ஷிப்டு சோர்ந்து போயிருப்பதால் விடுமுறையை எதிர்நோக்கிக் குஷியாக இருக்கிறார்கள். முதுகைத் தட்டிக் கொடுத்துச் சிரிக்கிறார்கள். பெரிதாக ஒரு சத்தம் கேட்டுத் தூக்கி வாரிப் போடச் செய்கிறது. நல்லவேளை ஒன்றும் ஆபத்தில்லை. ஓர் எஃகுக் குழாய் பாரம் தூக்கியின் பக்கவாட்டில் மோதிக்கொண்ட சத்தம்தான். 'ஸ்ஸ்ஸ்' என்று நிற்காமல் சதா நிலவும் ஒலி, எண்ணெய்க்காகக் குடையும் கருவி எழுப்புகிற ஓசை.

என்ஜினீயர் மல்ஹோத்ரா சாகர் சம்ராட் பற்றி விளக்குகிறார். இதனை அமெரிக்காவில் ஹூஸ்டனிலுள்ள ''ஆஃப் ஷோர் இன்டர்நேஷனல்'' என்ற நிறுவனம் தயாரித்த வரைபடத்தின் அடிப்படையில் ஜப்பானிய நிறுவனமாகிய மிட்ஸுபீஷி உருவாக்கியது. இந்தக் கப்பலின் விலை ரூ. 12.7 கோடி. 84 மீட்டர் நீளம். 40 மீட்டர் அகலம். 9070

எஸ். ஆர். மது

டன் எடை. நான்கு கால்களையும் கடல் படுகையில் ஊன்றி, நீர்மட்டத்தை விட்டு எழும்பி நிற்கும் போது இதன் உயரம் 113 மீட்டர். கால்களைக் கீழே ஊன்றுவதற்குப் பதில் ஆகாயத்தை நோக்கி உயர்த்தி விட்டால் சாகர் சம்ராட் நீரில் மிதக்கும். கடல் படுகைக்குக் கீழே 6000 மீட்டர் வரை எண்ணெய்க்காகக் குடையும் ஆற்றலுடையது.

சாம்ராட்டில் புவி இயல் ஆராய்ச்சி சாலை ஒன்று உள்ளது. கப்பலைச் செலுத்தவும் கடலின் அடிவாரத்தைக் குடையவும் கப்பலை உயர்த்தித் தாழ்த்தவும் தேவைப்படும் மின்சக்திக்காக ஒரு பெரிய ஜெனரேட்டர் இருக்கிறது. உப்பு நீரைக் குடிநீராக்கும் சுத்திகரிப்பு நிலையம் உள்ளது. தீயணைப்பு, உயிர்காப்புக் கருவிகள், படகுகள் முதலியன சித்தமாய் இருக்கின்றன. புயலோ மழையோ எதையும் இலட்சியம் பண்ணாமல் சாகர் சம்ராட் பணியாற்றிக் கொண்டேயிருக்கும் வருடம் 365 நாளும்.

இந்தியக் கடற்பரப்புக்கு 1973ல் வந்து சேர்ந்த சாகர் சம்ராட்டில் பணியாற்ற இந்திய நிபுணர்களுக்கு அமெரிக்க வல்லுநர்கள் பயிற்சி அளித்தனர். அன்று 28 அமெரிக்க நிபுணர்கள் இருந்தனர். இன்று நாலே பேர்தான். இந்திய நிபுணர்கள் 100 சதவிகிதம் தேர்ச்சி பெற்றுவிட்டனர். தாங்களாகவே சாகர் சம்ராட்டை நிர்வகிக்கும் ஆற்றல் பெற்றுவிட்டனர் என்று அமெரிக்கப் பிரதான இன்ஜினியர் கிராயிர் சொல்கிறார்.

- சாகர் சம்ராட்.
- விளையாட்டிலும் வித்தாரம்!
- நடுக் கடலில் எண்ணெய்க் கிணறு.

எடுத்த எடுப்பிலேயே மாபெரும் வெற்றி கிடைத்து விடவில்லை. ஆரம்பத்தில் இவர்கள் கப்பலை நிறுவிய இடத்தில் கடல் படுகை மிக மிருதுவாக இருந்தது. சம்ராட்டின் கால்கள் அனுமதிக்கப்படும் 18 மீட்டருக்கும் அதிகமாகவே மண்ணில் புதையுண்டன. வேறு மூன்று இடங்கள் பரிசீலனைக்குப் பின் கைவிடப்பட்டன. மற்றுமோர் இடத்தில் கப்பலை வெற்றிகரமாக ஊன்றிப் படுகையைக் குடைய ஆரம்பித்தார்கள். ஆனால் இங்கு அழுத்தம் அதிகமாகிப் பாறைகள் புரண்டு கொடுக்கத் தொடங்கின. கடைசியில் இப்போதுள்ள பாம்பே ஹை என்ற பிரதேசத்தில் கப்பலை நிறுவிக் குடைய ஆரம்பித்தனர். 1974 பிப்ரவரி 19ம் தேதி முதன் முதலாகப் பெட்ரோலியம் எண்ணெய் தட்டுப்பட்டது. இதற்கு இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, 1976 மே 21ம் தேதி வியாபார ரீதியில் உற்பத்தி தொடங்கியது. இது மிகப் பெரிய சாதனை என்பதால் எண்ணெய் இயற்கை வாயு கமிஷனை உலகம் போற்றியது. வடக்குக் கடலில் பிரிட்டன் எண்ணெய் எடுக்கிறது. அங்கே எண்ணெய் முதலில் தட்டுப்பட்டதற்கும் வியாபார ரீதியான உற்பத்திக்கும் இடையில் எட்டாண்டுகள் கழிந்தன!

இன்று பாம்பே ஹை பிரதேசத்தில் வியாபார ரீதியில் பெட்ரோலியம் எண்ணெய் உற்பத்தி செய்யும் நான்கு கிணறுகள் உள்ளன. இவற்றிலிருந்து கிடைக்கும் எண்ணெய் ஒவ்வொரு நாளும் நமக்கு அந்நியச் செலாவணியில் ஆயிரக்கணக்கான டாலர்



களை மிச்சப்படுத்தித் தருகிறது. மொத்தம் பாம்பே ஹை பிரதேசத்தில் பதின்மூன்று கிணறுகள் குடையப்பட்டன. இவற்றில் பதினொரு கிணறுகளில் எண்ணெய் தட்டுப்பட்டிருக்கிறது. இரண்டே கிணறுகள்தான் பலன் தரவில்லை. பாம்பே ஹை பிரதேசத்துக்கும் பம்பாய்த் துறைமுகத்துக்கும் இடைப்பட்ட பகுதியில் மூன்று கிணறுகள் குடைந்ததில் இரண்டு கிணறுகள் பலன் தந்துள்ளன. தெற்கு பஸ்ஸியின் பகுதியில் இயற்கை வாயு கிடைத்துள்ளது. ''ஆக, எண்ணெய்ப் படுகை நீண்ட தொலைவுக்கு இருப்பதாக நம்பலாம்'' என்கிறார் பெட்ரோலிய மந்திரி கே. டி. மாளவியா.

எண்ணெய் தட்டுப்பட்டதுமே வியாபார ரீதியான உற்பத்தி தொடங்குவதில் ஆபத்தும் உண்டு. சாதாரணமாகப் பல கிணறுகளைக் குடைந்து பார்த்து வியாபார ரீதியான சாத்தியக் கூறுகளை ஆராய்ந்து, நம்பிக்கை பிறந்த பிறகுதான் உற்பத்தி தொடங்குவார்கள். ஆனால் பாம்பே ஹை பகுதியில் இரண்டு அம்சங்களையும் ஒன்றோடொன்று இணைத்து ஒரே சமயத்தில் செயல்படுத்தியிருக்கிறார்கள். அவசரத்துக்குக் காரணம் அராபிய எண்ணெய் விலை உயர்வுதான்.

ஆயினும் அவசரம் அசட்டுத்தனமாக முடியாதிருக்க இரு உலகப் பிரசித்தி பெற்ற, அனுபவம் மிக்க நிறுவனங்களைக் கலந்தாலோசித்தது எண்ணெய் இயற்கை வாயுக் கமிஷன். இந்த அமெரிக்க, பிரெஞ்சு நிறுவனங்கள் துரிதமான வியாபார ரீதியான உற்பத்திக்கு உதவ ஒரு திட்டம் வகுத்துத் தந்தன. இதன்படி 1977 ஆரம்பத்தில் ஆண்டொன்றுக்கு இரண்டு மிலியன் டன் என்ற விகிதத்தில் உற்பத்தி நடக்கும். 1980இலோ ஆண்டொன்றுக்கு 10 மிலியன் டன் என்ற விகிதத்தில் எண்ணெய் உற்பத்தியாகும்.

குறித்த தேதியில் உற்பத்தி தொடங்கியே தீர வேண்டும் என்பதால் எண்ணெய் இயற்கை வாயுக் கமிஷனைச் சேர்ந்த நிர்வாகிகளும், பொறி இயல் நிபுணர்களும் ஆவேசம் வந்தவர்கள் போல் உழைத்தார்கள். சிவப்பு நாடா அறவே நீங்கியது. அந்தந்த மட்டத்திலேயே முடிவுகள் எடுக்கப்பட்டன. பல்வேறு நிறுவனங்களுடன் நூற்றுக் கணக்கான ஒப்பந்தங்கள் இரண்டே மாதங்களில் கையெழுத்தாயின. இந்திய ஷிப்பிங் கார்ப்பொரேஷனைச் சேர்ந்த ஜவாஹர்லால் நேரு என்ற 88,000 டன் எண்ணெய்க் கப்பலை பாம்பே ஹை பகுதியில் உற்பத்தியாகும் எண்ணெயைச் சேமிக்க வாடகைக்கு அமர்த்திக்கொண்டனர். இந்தப் பரபரப்பு எல்லாம் சேர்ந்து எண்ணெய் இயற்கை வாயு கமிஷன் அதிகாரிகள் பலரை உலுக்கி எடுத்து விட்டது. ஒருவர் படுத்த படுக்கையானார். ஆனாலும் அவர் யோசனைகள் தேவைப்பட்டன. காய்ச்சலுடன் படுத்திருந்தவாறே யோசனைகளைக் கூறி வந்தார்.

இப்படிப் பலரும் பட்ட பாடு வீண் போகவில்லை. இந்தியா புதிய நம்பிக்கையுடன் எதிர்காலத்தை நோக்குகிறது. 1964க்குப் பிறகு நிலத்தில் எண்ணெய்க் கிணறு ஏதும் தட்டுப்படாததால் சோர்ந்திருந்த தேசம் இன்று கடலின் அடிவாரத்தைக் குடைந்து கிடைக்கும் எண்ணெய் காரணமாகப் புத்துணர்ச்சி பெற்றுள்ளது. பாம்பே ஹை பகுதியின் உற்பத்தியோ அதிசயிக்கத் தக்க அளவில் அதிகமாக இருக்கிறது! நிலத்தில் சில எண்ணெய்க் கிணறுகள் ஒரு நாளில் நூறு பீப்பாய் எண்ணெய்தான் தரும் என்றால் பாம்பே ஹை எண்ணெய்க் கிணறு ஒன்று ஒரே நாளில் நாலாயிரம் பீப்பாய் எண்ணெய் கொடுக்கிறது! மேலும் பாம்பே ஹை எண்ணெய் தரத்தில் மிகவும் உயர்ந்ததாக இருக்கிறது. (கந்தகம் குறைவு).

பாம்பே ஹையில் கிடைக்கும் இயற்கை வாயுவின் ஒரு பகுதி இன்று குடையும் கருவிகளை இயக்கும் சக்தியாகப் பயன்படுகிறது. பாக்கி எரிக்கப்படுகிறது. ஆனால் சீக்கிரமே இந்த வாயுவைக் குழாய்கள் மூலம் தீபகர்ப்பத்துக்குக் கொண்டு வருவோம். 1980ல் ஒரு நாளைக்கு மூன்று மிலியன் கன மீட்டர் வாயு உற்பத்தியாகும். இது ரசாயன உர ஆலைகளில் பயன்படும். வீடுகளில் சமையலறைகளில் உபயோகமாகும். புதிய பல தொழிலகங்கள் தொடங்க உதவும். பாம்பே ஹையில் உற்பத்தியாகும் பெட்ரோலியம் எண்ணெய் இப்போது கப்பலில் நிரம்பிக் கரைக்கு வந்து சேர்ந்தாலும் அதனைக் குழாய்களின் மூலம் தீபகர்ப்பத்துக்கு அனுப்ப ஏற்பாடுகள் ஏற்கனவே தொடங்கிவிட்டன.

1985 வாக்கில் பாரதம் பெட்ரோலியம் எண்ணெய் உற்பத்தியில் தன்னிறைவு பெற்று விடும் என்று நிபுணர்கள் நம்பிக்கையுடன் கூறுகின்றனர்.

எண்ணெய் இயற்கை வாயு கமிஷனின் இந்தத் தீவிர இயக்கம் காரணமாக வேறு பல நிறுவனங்களிலும் சூடு பிடித்திருக்கிறது. கமிஷனுக்குத் தேவையான பல்வேறு உபகரணங்களையும் அயல்நாடுகளிலிருந்து தருவிப்பதற்குப் பதில் உள்நாட்டிலேயே தயாரிக்கலாம் என்ற சவாலை ஏற்றுக் கொண்டுள்ளன. பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் 1977ல் ஏழு ஆழக் குடையும் கருவிகளைத் தயாரித்தளிக்கப் போகிறது. பாரத் பம்ப்ஸ் அண்டு கம்ப்ரஸர்ஸ் நிறுவனம் சேறு இறைக்கும் பம்புகளை உருவாக்கி வழங்கப் போகிறது. இந்திய எலெக்ட்ரானிக் கார்ப்பொரேஷன் புவிஇயல் நிபுணர்களுக்குத் தேவைப்படும் பல்வேறு கருவிகளைத் தயாரித்து வருகிறது. இன்னும் அணு சக்திக் கமிஷன் இந்திய எஃகு நிறுவனம் ஆகியவையும் போட்டி போட்டுக் கொண்டு பல்வேறு உபகரணங்களைத் தயாரிக்க முன்வந்துள்ளன.

•

எண்ணெய் ஒரு தேசத்துக்குச் சக்தி அளிக்கிறது; பொருளாதார மேம்பாட்டை வழங்குகிறது; பாதுகாப்பைப் பலப்படுத்துகிறது; தொழில் வளம் பெருக அத்தியாவசியமாகிறதென்றால் அதனைக் கண்டுபிடித்து உதவும் புவி இயல் நிபுணர்களும் அதன் உற்பத்தியில் ஈடுபடும் பொறி இயல் வல்லுனர்களும் எப்படிப்பட்ட அரிய பணியாற்றுகிறார்கள்! அதனால்தான் எண்ணெய் இயற்கை வாயு கமிஷனின் தலைவர் டாக்டர் பிரசாத், இத்துறையில் புழக்கத்திலுள்ள ஒரு வாசகத்தை வலியுறுத்திக் கூறுகிறார்: ''எண்ணெய் கண்டுபிடிக்கப்படுவது மனிதர்களின் மூளையில்தான்.''

—நன்றி: ஸ்பான்

# பப்பு ஃபீடரின் தரச்சிறப்பிற்குத் தக்க சான்று— உங்கள் கண் முன்னே!

U-P-8 TM




- முன் உபயோகப்படுத்தப் படாத, தனிப்பட்ட மூலப் பொருளால் ஆன மூடி, அடிக்கடி கொதிக்க வைத்தாலும் கெடாது, துர்நாற்றம் வீசாது.

- புத்தம்புதிய ரப்பரால் ஆன, தனிப்பட்ட வடிவமைப்பு கொண்ட நிப்பிள் தங்கு— தடையின்றி பால் பாய்ந்து வருகிறது.



- அத்துடன் நிப்பிள் உறை இலவசம். சுகாதாரத்திற்கு ஆதாரம்.




- தரமுயர்ந்த கண்ணாடியில் தயாரானது—அதிக உழைப்பாற்றல், சுத்தம் மற்றும் சுகாதாரம்.

- நிர்ணயிக்கப்- பட்ட ஊட்ட அளவு: 225 மி.லி. (8 அவுன்ஸ்), வேறு சில ஃபீடர்களைப் போல் 200 மி.லி. (7 அவுன்ஸ்) அல்ல.



துடிப்பான குழந்தைப் பருவத்தின் இனிய துணை

## பப்பு

ஃபீடர் மற்றும் நிப்பிள்

# டினோபால்* பெறும் புதிய பெயர்

# ராணிபால்+



ராணிபால்+
(பருத்தித் துணிகளுக்கு)




ராணிபால்+-எஸ்
(செயற்கை இழை மற்றும் கலப்பு இழைத் துணிகளுக்கு)




அதே பொருள், அதே திறன், ஆனால் பெயர் மட்டும் புதிது!

## சிறந்த வெண்மைச் சலவைக்கே ராணிபால்+

**Suhrid Geigy**
LIMITED

+ ஸுஹ்ரீத் கெய்கீ லிமிடெட்டின் ட்ரேட் மார்க் ஆகும்

* ஸீபா கெய்கீ லிமிடெட்டின் லைஸென்ஸ்படி முன்னுனில் விற்பனை செய்யப்பட்டது.

# பட்ஜெட் சிந்தனை

நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்குப் பிறகு, குறிப்பாகச் சென்ற ஆண்டு பட்ஜெட்டுக்குப் பின்னர், தேசத்தில் உற்பத்தி அதிகரித்துப் பொருளாதார நிலைமை பெருமளவு பலப்பட்டிருக்கிறது. 1976—77ல் பத்து சதவிகிதம் உற்பத்தி அதிகரிப்பதாகக் கணக்கிட்டுப் பெருமைப்படுகிறோம். உலக நாடுகள் பலவற்றின் பாராட்டையும் உலக பாங்கின் மெச்சுதலையும் பெற்றிருக்கிறோம்.

இதெல்லாம் ஆரம்ப சூரத்தனமாக முடிந்து விடக் கூடாது. மீண்டும் தேக்க நிலை தோன்றுவதற்கான அறிகுறிகளை ஏற்கெனவே காண ஆரம்பித்து விட்டோம். இதனை அனுமதிக்கலாமா?

கவலைக்கிடம் தரும் முக்கியமான அம்சங்கள் முதலீடு பெருகவில்லை என்பதும் உற்பத்தியான பல பொருள்களை வாங்குவோர் இல்லை என்பதும் தான். சிமெண்டு, ஜவுளி, பொறியியல் துறைப் பொருட்கள் ஆகியன மிகவும் பாதிக்கப்பட்டுள்ளன. மேலும் மேலும் பல நெசவாலைகள் நோயுற்று மூடப்படும் நிலைக்கு வந்துள்ளன. நாட்டில் வீட்டுவசதிகள் மிகவும் குறைவாக இருந்தும், திட்ட இனங்களில் முதலீடுகள் அதிகரித்திருந்தும் சிமெண்டு உபயோகம் அதிகரிக்கவில்லை; மாறாகக் குறைந்தே விட்டது! நகர்ப்புற நில உச்ச வரம்புச் சட்டம் இதற்கொரு முக்கிய காரணம். எத்தனை கொத்தனார்களும் ஆசாரிகளும், ஃபிட்டர்களும், ப்ளம்பர்களும் வேலையின்றித் தவிக்கிறார்களோ; கணக்கிடக் கூட முடியாத ஒரு துறை இது.

தேசப் பொருளாதாரம் சூடு பிடிக்கவும் வேலைவாய்ப்புக்கள் பெருகவும் அரசாங்கம் கம்பெனிகளுக்கான வரிகளைப் பத்து சதமாவது குறைக்க வேண்டும் என்று டாக்டர் பரத்ராம் கூறியிருக்கிறார். தவிர, இறக்குமதி தீர்வைகளையும் உற்பத்தி தீர்வைகளையும் (Import & Excise) கணிசமாகக் குறைக்க வேண்டும் என்று கோரியுள்ளார். கம்பெனிகளுக்கான வரிகளைக் குறைத்தால்தான் முதலீடு பெருகிப் புதுத் தொழில்கள் ஏற்பட்டு வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்கும். வேலை வாய்ப்புக்கள் பெருகுவதைப் பொறுத்துத்தான் உற்பத்தியாகும் பொருள்கள் தேங்காமல் சுறுசுறுப்பாக விற்பனையாகும்.

அமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் தனி நபர்கள் மீதான வரிகளைக் கணிசமாகக் குறைத்துத் தாம் யதார்த்த ரீதியான சிந்தனைப் போக்குடையவர் என்பதைச் சென்ற பட்ஜெட்டில் நிரூபித்தார். அதன் நற்பலன்களையும் தேசம் உணர்ந்து வருகிறது. இப்படி வரி விகிதங்களைக் குறைத்ததால் அரசாங்கத்தின் வருமானம் குறையவில்லை; மாறாக அதிகரித்தே இருக்கிறது என்பதையும் திரு சி. எஸ். சமீபத்தில் ஒப்புக் கொண்டார். இதேபோல் கம்பெனி வரிகள், உற்பத்தி தீர்வைகள் விஷயத்திலும் அமைச்சர் நடந்துகொண்டால், அதிகரிக்கும் பொருளாதார நடவடிக்கைகள் காரணமாக மொத்தத்தில் அரசுக்கு வருவாய் கூடுமேயன்றிக் குறையாது.

கம்பெனிகள் லாபம் அடைவதை ஏதோ பெரும் குற்றம் போல் கருதுகிற மனப்பான்மை மாற வேண்டும். கம்பெனிகள் லாபம் கண்டு அந்த லாபம் புதிய தொழில்களிலும் அபிவிருத்தித் திட்டங்களிலும் முதலீடாக அரசு ஊக்கமளிக்க வேண்டும்.

மறைமுக வரிகளை ஆராய்ந்து சீர்திருத்தங்களைச் சிபாரிசு செய்யுமாறு திரு ஜா அவர்களைத் தலைவராகக் கொண்ட கமிட்டியை அமைத்திருக்கிறது அரசு. ஜா கமிட்டியின் சிபாரிசுகள் அரசுக்குக் கிடைக்க இன்னும் சில காலம் பிடிக்கலாம். அதற்காகக் காத்திராமல் அரசு வருகிற பட்ஜெட்டில் தானாகவே சில பல சலுகைகளை மறைமுக வரிகள் விஷயத்தில் காண்பிக்க வேண்டும்.

திரு சி. எஸ். அடுத்துச் சமர்ப்பிக்கப் போகும் பட்ஜெட் சேமிப்பையும் முதலீட்டையும் ஊக்குவிக்கும் பட்ஜெட்டாக விளங்கட்டும்.

கல்கி மலர் 36 இதழ் 26



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# காக்கும் கரங்கள்!

சிவப்பு முக்கோணத்துக்கு அடுத்தபடியாக இன்று நாட்டில் மிகவும் பிரபலமாகி விட்டிருக்கும் சின்னம், தீபம் அணையாமல் காக்கும் கரங்கள். அதற்கு இன்று இருபத்தோரு வயதாகிறது.

எல்.ஐ.ஸி. புதுப்புது விதமான பாலிஸிகளை மக்களுக்கு வழங்கத் தயாராகிக் கருத்தைக் கவர்கிறது. இருபதாண்டுகளில் எல். ஐ. ஸி. யின் பாலிஸிகள் நான்கு மடங்காகப் பெருகியுள்ளன. இது அரிய சாதனைதான் என்றாலும் தேசத்தின் மொத்த ஜனத்தொகையோடு ஒப்புநோக்குகையில் இரண்டு கோடி பாலிஸிகள் என்பது மிகவும் குறைவு. ஆக, எல். ஐ.ஸி.யின் முக்கியத்துவத்தையோ அது தங்களுக்கு அளிக்கக்கூடிய பாதுகாப்பையோ மக்கள் முழுமையாக உணரவில்லை என்றாகிறது. பெரிய நகரங்களில் மட்டுமின்றி சிற்றூர்களிலும் கிராமங்களிலும் எல்.ஐ.ஸி.யின் பணி மேலும் அதிகரிக்க வேண்டும்.

ஆயுள் இன்ஷுரன்ஸில் உள்ள குறைபாடுகள் இரண்டு. ஒன்று இதில் நாம் சேமிக்கும் பணத்துக்கு வட்டி கிடையாது. மற்றது பண வீக்கம் காரணமாக ரூபாய் மதிப்பிழக்கிறது. இன்றைக்கு நாம் பிரீமியமாகக் கட்டும் நூறு ரூபாய் இருபதாண்டுகளுக்குப்பிறகு நூறு ரூபாயாகவே திரும்பினாலும் அதன் வாங்கும் சக்தி குறைந்து விடுகிறது. போனஸ் என்று எல். ஐ. ஸி. தரும் தொகை மேற்சொன்ன இரு குறைபாடுகளில் ஒன்றைக்கூட முழுமையாக ஈடுகட்ட முடியாது. மேல்நாடுகளில் பல இன்ஷுரன்ஸ் கம்பெனிகள் பண வீக்கம் காரணமாக நாணயம் மதிப்பிழந்தால் அதனை ஈடுகட்டுவதாக உத்தரவாதமளிக்கின்றன. இந்தக் குறைபாடுகள் ஒருபுறம் இருந்தாலும் மரணம் என்கிற பெருந் துயர் இல்லத்தைச் சூழும் போது வறுமை என்கிற கஷ்டமும் பெரும் சுமையாக வந்து சேராமல் காக்கின்ற எல். ஐ. ஸி.யின் பணி மகத்தானது. நாம் கட்டுகிற பிரீமியம் தொகைகள் தேசப் பொருளாதாரப் புனருத்தாரணத்துக்குப் பயனாகிறது என்ற திருப்தியும் உண்டு.

நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்குப் பிறகு எல். ஐ. ஸி. ஊழியரிடையே பொறுப்புணர்ச்சி அதிகமாகி யுள்ளது. இந்தப் போக்கு மேலும் அபிவிருத்தி அடைந்து, பொறுப்புணர்ச்சியுடன் சேவா மனப்பான்மையும் இணைந்து செயல்பட வேண்டும். விளம்பரங்களில் காணப்படும் ''ஆயுள் இன்ஷுரன்ஸ் போல் ஆதரவு தருவது வேறு இல்லை'' என்ற சொற்றொடர் அர்த்தமுள்ளதாக வேண்டுமானால் அது பணம் பெறுவதிலும் ரசீது போடுவதிலும் மட்டுமில்லை; ஒவ்வொரு எல். ஐ. ஸி. ஊழியரும் பாலிஸிதாரரிடமும் அவரது குடும்பத்தினரிடமும் பரிவும் பண்பும் அன்பும் காட்டி நடந்து கொள்ளும் விதத்திலும் இருக்கிறது.

# உலகத்தின் கண்டனம்

பாரிஸிலுள்ள கலைப் பொருள்களை அழித்துவிட ஹிட்லர் ஆணையிட்ட போதிலும் அவரது தளபதிகளுக்கு மனம் வரவில்லை! அவ்வளவு கலை உணர்வும் நாகரிக முன்னேற்றமும் அடைந்த பிரான்ஸ் தேசம் இன்று பணம் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு ஒரு காரியம் செய்து விட்டதை உலகம் கண்டிக்கிறது.

ஜெர்மனியில் நடந்த ஒலிம்பிக் பந்தயங்களின் போது இஸ்ரேலிய விளையாட்டு வீரர்கள் பலரை அராபிய கொரில்லாக்கள் சுட்டு வீழ்த்திய கொடுமை இன்னும் உலக மக்கள் நெஞ்சங்களிலிருந்து நீங்கவில்லை. இது சம்பந்தமாக பிரான்ஸில் விசாரணையில் இருந்த பாலஸ்தீனக் கொரில்லாத் தலைவர் தாவுத்தை பிரான்ஸ் விடுவித்து விட்டது. அது மட்டுமல்ல, விசாரணைக்கு அவரை ஜெர்மனிக்கோ அல்லது இஸ்ரேலுக்கோ அனுப்பவும் மறுத்துவிட்டது.

தாவுத்தை விடுவிக்க உண்மைக் காரணம் அவர் குற்றமற்றவர் என்பதல்ல, அராபிய எண்ணெய் விலை உயர்வும் அதன் விளைவாக பிரான்ஸ் அராபிய நாடுகளுடன் வர்த்தக உறவை அதிகரித்துக் கொள்ள வேண்டியிருப்பதும்தான்!

ஏற்கெனவே உலக அபிப்பிராயத்தைப் பொருட்படுத்தாமல் பசிபிக் கடலில் அணுகுண்டு சோதனை நடத்தி வாங்கிக் கொண்ட கெட்ட பெயரை இந்த இழி செயலால் பிரான்ஸ் இரட்டிப்பாக்கிக் கொண்டிருக்கிறது.

ராஜாஜி சிந்தனை

## ஆணிவேர்

''இச்சகத்துளோரெல்லாம் எதிர்த்து நின்று துச்சமாக எண்ணி நம்மைத் தூறு செய்த போதிலும், நச்சை வாயிலே கொணர்ந்து நண்பர் ஊட்டு போதினும், உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதினும் அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமென்பதில்லையே'' என்று பாரதியார் பாடினார். இந்த அச்சமின்மையைத் தருவது வேதாந்தம். முற்காலத்திலும் இக்காலத்திலும் இந்நாட்டின்சரித்திரத்தில் கண்ட தைரியம், வீரம், தியாகம், பெருமை எல்லாவற்றிற்கும் மூல சக்தி வேதாந்தம். ஒவ்வொருவன் உள்ளத்திலும் வேதாந்தம் இப்போதும் ஊன்றி நிற்கிறது. புது நாகரிகம், புது உணர்ச்சிகள், புதுச் சம்பிரதாயங்கள் எவ்வளவு புகுந்தினாலும் வேதாந்த மூலவேர் அழியவில்லை. நகர வாழ்க்கை, கிராம வாழ்க்கை, பணக்காரன் வாழ்க்கை, ஏழைகளின் வாழ்க்கை, படித்தவர்களின் வாழ்க்கை, மூடர்களின் வாழ்க்கை, யோக்கியர்கள், அயோக்கியர்கள் எல்லாருடைய வாழ்க்கையிலும் வேதாந்த வாசனை வீசுகிறது. வேதாந்தமே இந்த நாட்டு மக்களின் வாழ்க்கைக்கு ஆணி வேர்.

— ''அச்சமில்லை'' என்ற நூலில்









தி.மு.க. அனுதாபிகளான அரசு ஊழியர்கள் அரசாங்கத்தின் முற்போக்குத் திட்டங்களுக்கு இடையூறாக இருந்து வருகிறார்கள் —

சி. எஸ்.

ஆக்கசக்தி நெருக்கடியினால் ஏற்பட்ட சங்கடமான நிலை டாடா ஸ்டீலிலுள்ள எங்கள் இளம் நிபுணர்களுக்கு அதைத் திறம்பட சமாளிக்கும் ஆற்றலை அளித்தது.

ஆக்கசக்தி உபயோகத்தில் சேமிப்பு பற்றிய தீவிரமான ஆராய்ச்சிகள் பல புது வழிகளைப் புலப்படுத்தியுள்ளன. சம்பஸ்சன் ஏர் கண்ட்ரோல் ஸிஸ்டம்களைப் பல தொழிலிடங்களில் நிறுவி வியர்த்தமாகும் காஸினால் ஏற்படும் உஷ்ண நஷ்டத்தைக் குறைக்க வழி செய்யப்பட்டுள்ளது; தவிர எரிபொருள் தரமும் சீராக்கப்பட்டுள்ளது. தேவையான இடங்களில் வேஸ்ட்ஹீட் ரெகூப்பரேட்டர் ஸிஸ்டம்கள் மீண்டும் நிறுவப்பட்டிருப்பதோடு அவற்றின் செயலாற்றலை உச்சநிலைப் படுத்துவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஃபர்னஸ்களில் இன்ஸுலேஷன் செய்யப்பட்டதோடு அவற்றில் காலத்திற்கேற்றவாறு புதுமைகள் செய்யப்பட்டுள்ளன. உச்சநிலையில் மறு-உபயோக முறைகளின் பயனாக குளிர்ச்சிக்கான தண்ணீர் பம்ப் செய்வது குறைக்கப்பட்டுள்ளது.

மொத்த உற்பத்திச் செலவில் மூன்றில் ஒரு பங்கு ஆக்கசக்திக்காகச் செலவிடும் தொழிற்துறையில் இந்த சேமிப்புகள் மிக மதிப்புள்ளவையாகும். காரணம், தாங்கமுடியாத ஆக்கசக்திச் செலவின் பளுவை சமாளிக்க இவை உதவுகின்றன.

இளமை மிடுக்கோடு இருப்பவர்கள் என்றென்றும் புதுப்புது சோதனைகளை வரவேற்பார்கள்.

## புதுப்புது சோதனைகள் எங்களுக்கு இளமையூட்டுகின்றன



டாடா ஸ்டீல்

TIS-1247 A

# "ஆறு கால்" ஸ்தோத்திரம் (3)

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்



**வை**ஷ்ணவர்கள் ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் சரீர-சரீரி என்கிற மாதிரியே (சைவ) சித்தாந்திகளும் சொல்வதுண்டு. அதாவது நம் சரீரத்துக்குள் உயிர் என்று ஒன்று இருக்கிறது; அது போய்விட்டால் இந்த சரீரம் அடியோடு பிரயோஜனம் இல்லாததாகி விடுகிறது. இதே மாதிரி சகல ஜீவாத்மாக்களும் சேர்ந்து பரமாத்மாவுக்குச் சரீரம்; அதற்குள் உயிராக இருப்பவனே பரமாத்மா; உயிருக்கு உயிராக என்பது போல், இத்தனை உயிர்களுக்கும் உயிராக, பேருயிராக இருப்பவனே பரமாத்மா — என்பதுதான் சரீர—சரீரி தத்துவம். நமக்குத் தெரிவது சரீரம்தான். உயிர் தெரியவில்லை. அதனால்தான் சரீரத்துக்கே ''மெய்'' என்று பேர் வைத்தார்கள். ஆனாலும் நமக்குத் தெரியாமல் இருக்கிற உயிர் போய்விட்டதானால், அப்புறம் இந்த 'மெய்' ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாத பொய்யாகி விடுகிறது. 'மெய்யும் பொய்யான பின்' என்றுகூடப் பாடுகிறார்கள். இப்படித்தான் ஜீவலோகமும் உள்ளே அந்தர்யாமியாக இருக்கிற பேருயிரான பகவான் இல்லாவிட்டால் பொய்யாகப் போய்விடுகிறது.

'பொய்' என்று சொன்னாலும், அத்வைதத்தில் ஆசாரியாள் பரம ஸத்தியமான ஒன்றை (பிரம்மத்தை)த் தவிர இன்னொன்று இருப்பதே பொய், அது வெறும் மாயத் தோற்றம்தான் என்று சொல்கிற ரீதியில் (சைவ) சித்தாந்திகள் சொல்லவில்லை. ஈச்வரன் உள்ளே புகுந்து ஆட்டுகிற இந்த ஜீவப் பிரபஞ்சத்துக்கும் ஒரு சத்யத்துவத்தை அவர்கள் சொல்வார்கள். இதற்குத்தான் இந்த உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்தைத் திருஷ்டாந்தமாகச் சொல்வார்கள். மெய்யெழுத்து என்பது க், ங், ச், ஞ் முதலானவை. உயிரெழுத்துக்கள்தான் அ, ஆ, இ, ஈ வரிசை. இரண்டும் சேர்ந்த க-கா-கி-கீ, ங-ஙா-ஙி-ஙீ, ச-சா-சி-சீ, ஞ-ஞா-ஞி - ஞீ மாதிரியானவைதான் உயிர்மெய் என்பவை. இங்கே மெய்யெழுத்து வேறே, உயிரெழுத்து வேறே என்று பிரித்திருப்பதாலேயே, 'மெய்' என்று சொல்லப்பட்டாலும் அந்த ஒலிகளுக்குத் தனியாக உயிர் இல்லை என்று ஆகிவிட்டது. சரீரத்துக்கு மெய் என்று பெயர் வைத்தாலும் உயிரில்லாவிட்டால் அது எதற்கும் உதவாத மாதிரிதான் மெய்யெழுத்தும். க், ங், ச், ஞ் முதலான ஒலிகளைத் தனிப்பட உச்சரிக்கவே முடியாது. இக், இங், இச், இஞ் என்று முதலில் சின்னதான ஒரு 'இ' சப்தம் சேர்த்தால்தான் இந்த ஒலிகளே வெளியில் வரும். அல்லது பின்னாடி அ, ஆ முதலான உயிரெழுத்துக்களைக் கூட்டி க, கா என்ற மாதிரி ஒலியை வெளிப்படுத்த முடிகிறது. உயிரெழுத்து இல்லாமல் இவை பிரயோஜனமில்லை. ஆனால் அதற்காக இந்த மெய்யெழுத்துக்கள் (Consonant) அடியோடு இல்லை, ஒரே பொய் என்று சொல்லலாமா? உயிரெழுத்து (vowel) சேர்ந்தால் இவை க, ங, ச, ஞ என்று வேறு வேறு ரூபத்தை, ஒலியைப் பெறத்தானே செய்கின்றன? எல்லாம் ஒரே சப்தமாக இல்லையே! அதனால் இந்த மெய்யெழுத்துக்களுக்கும், உயிரெழுத்தில்லாமலே தனித்தனியாக ஒரு ரூபம் இருக்க வேண்டும், அதனால் ஒரு சத்யத்வம் இருக்க வேண்டும் என்று தானே அர்த்தம்? எனவே மெய்யெழுத்துக்கள் தாமாகவே கொஞ்சம் மெய் மாதிரி இருப்பவைதான். இதே ரீதியில் ஜீவர்களும் வேறு வேறாக இருக்கிறார்கள் என்றால், அவர்களுக்கும் மெய்யெழுத்துக்கு இருக்கிற மாதிரி கொஞ்சம் தனியான சத்யத்வம் இருக்கத்தான் வேண்டும், ஒரே பொய் என்று தள்ளிவிட முடியாது; ஆனாலும் உயிர் போய்விட்டால் எல்லாரும் ஒரே மாதிரிச் சவமாகி விடுகிறமாதிரி, 'ஜீவப் பிரபஞ்சமும் சிவம் என்ற பேருயிர் இல்லாவிட்டால் சவம்தான்' — என்றிப்படி (சைவ) சித்தாந்திகள் சொல்வார்கள். அத்வைதமாக எல்லாம் ஒரே ஆத்மா என்று சொல்லாமல், கொஞ்சம் பிரித்து த்வைதமாக இருப்பதற்கு இப்படி திருஷ்டாந்தம் காட்டுகிறார்கள். ஜீவாத்மா மெய்யெழுத்து, பரமாத்மா உயிரெழுத்து மாதிரி என்கிறார்கள்.

வாஸ்தவத்தில் ஸ்ரீ சங்கர பகவத்பாதரும் லோகம், ஜீவன் முழுப் பொய் என்று சொல்லவில்லை. ஸத்தியத்திலேயே அவர் பல நிலைகளை (லெவல்களை) சொல்லியிருக்கிறார். ஆனால் இங்கே நான் தத்வச்சண்டை போடவரவில்லை. ஆசார்யாளே இந்த வாதம், சண்டை எல்லாம் வேண்டாம் என்று நமக்குக் கற்றுக் கொடுக்க வந்த ஷட்—பதீ ஸ்தோத்திரத்தைத்தான் சொல்ல ஆரம்பித்தேன். ஷட்பதீ—ஆறுகால் என்பதை விளக்க ஆரம்பித்தபோது ச்லோகத்தின் பாதங்களைப் பற்றிப் பேச்சு வந்து, அது அக்ஷரக் கணக்கில் கொண்டு போய், சைவ சித்தாந்தத்தில் இழுத்துவிட்டது!

மறுபடியும் 'சக்லாம்பரதரம்' குட்டிக் கொள்ள வேண்டும். (தொடரும்)

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

# அமுல் — உங்கள் பால்காரர்



# அமுல் — உங்கள் தேநீர்க்காரர்



¼ லிட்டர் டம்ளரில் 2½ டேபிள்ஸ்பூன் அமுல் மில்க் பவுடரை நன்கு குவியச் செய்து போடவும். சிறிதளவு சுடுநீருடன் கலந்து நன்கு கலக்கிப் பசைபோல் ஆக்கிக்கொள்ளவும். பின் அதன் மேல் வரை சுடு நீரை மேலும் சேர்த்து நன்கு கலக்கவும். உங்கள் குழந்தைக்-கான க்ளாஸ் அளவு பால் தயார்! (முழுமையான விவரங்களுக்கு டின் மீது பார்க்கவும்.) அமுல் மில்க் பவுடர் தேயிலை பானத்திற்கும் காப்பிக்கும் கூட மிக ஏற்றதாகும்.

# அமுல் — உங்கள் தயிர்க்காரர்



கறந்த பாலிற்குச் செய்வது போலவே, மேற்கண்ட முறைப்படி பாலைச்செய்து, சாதாரணமாகச் செய்வது போலத் தயிராகத் தோய்க்கவும்.




# அமுல்

## மில்க் பவுடர்

### வீட்டினுள் இயங்கும் ஒரு பால் பண்ணை



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோவாப்பரேட்டிவ்
மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன்
லிமிடெட், ஆனந்த்

RADEUS/AMP-1

# விஞ்ஞானக் கதைகளும் வியப்பூட்டும் நிலைகளும்!

### சுஜாதா கதையில் சுந்தரிகள்:

அவரது முதல் கதையே பெண்ணைப் பற்றியதுதான். எந்த முன்னேற்றங்கள் வந்தாலும் பெண்மை என்ற குணம் மாறாது என்பதைத் தெள்ளத் தெளிவாக "ஒன்பதாவது பெண்" காட்டுகிறான். உடலுறவு கொள்ளுமுன் குளிக்கவேண்டும் என்ற சுகாதாரவிதிக்குக் கட்டுப்பட்டு நித்யா குளிக்கச் செல்கின்றாள். "நானும் வருகிறேன் – இருவரும் குளிக்கலாம்" என ஆத்மா அவசரப்படுகிறான். (ஆணினமே அப்படித்தானே!) "வேண்டாம், நீ என் கணவன்" எனக் கூறுகிறாள். கணவன் என்ற சொல்லுக்கு இன்று உள்ள மதிப்பு காலங்கள் மாறினாலும் மாறாது என்பதற்கு இது ஒரு சான்று. என் கணவன் கடிதத்தைப் பிரித்தால் என்ன? என்று அவள் உரிமைக் குரல் எழுப்பும்போது தமிழகப் பெண்டிர் தோற்று விட்டார்கள்.

அப்படிப்பட்ட விஞ்ஞான யுகத்திலும்கூடப் பெண்களைப் பணயமாக வைத்துச் சூதாடும் கம்பெனி ஒன்று இருந்தது என்றால், குறுக்கு வழியும் தீய நோக்கமும் மனிதனின் உடன் பிறப்போ அல்லது அவனது Gene இன் குணமோ என வியக்கத் தோன்றுகிறது.

ஆனால் பெண்ணினம் எப்படி இருந்ததாம்?

"அமைதிப் படைப் பெண்கள் வந்தபோது நித்யா மெல்ல விசும்பிக் கொண்டிருந்தாள்" அந்த யுகத்திலும் விசும்பல் நிற்கவில்லை.

பெண்களை அவர்கள் ஒரு பிரஜா விருத்தி இயந்திரமாக, மிகத் தேவையான இயந்திரமாக நினைத்தனர் என்று "சூரியன்" கதையில் கூறுகிறார். "காலமானவரில்" பெண் மோகம் தீரவில்லை என்பதற்குச் சந்திரா தம் அறையில் ஸ்டீரியோவிஷனில் ஒரு பெண்ணை உண்டாக்கி, அவளை "வாடி" "வாடி" எனக் கூப்பிட்டுக் கொண்டிருந்தார் என்பது சான்று. என்று தணியும் இந்தப் பெண் மோகம்?

'Sight Seeing' அந்தக் காலத்திலும் மறையவில்லை என்பது "நகர் வலம்" கதையில் தெளிவாக்கப்படுகிறது. (நித்யா குளிக்கும் போது கண்கள் மொய்ப்பது)

பெண்மீது மோகம் கொண்டு கல்யாணம், கல்யாணம் பண்ணிக் கொண்டால் "கால யந்திரம்" கெட்டுவிடும் என டாக்டர் எச்சரிக்கை விடுக்கிறார்.

"தேவன் வருகை"யின்போது 'என்ன உடுத்திக் கொள்வது என்று யோசிக்கிறேன்' என அவள் சொல்லும்போது நமது சகோதரிகள் தான் என் நினைவுக்கு வந்தனர்.

### சுஜாதா கதையில் ஆண்கள்:

அந்த விஞ்ஞானக் காலத்திலும் ஒன்பது பெண்களை வேட்டையாடினால், காசில்லாப்

### 3. ஒரு சிந்தனைக் கடல்!

பிரயாணம் என்றிருந்தால் எப்போது தான், நாடு முன்னேறும்? பசப்பு வார்த்தைகள் பேசி, தன் இச்சைக்குப் பெண்ணைப் பணிய வைப்பதில் ஆண் அறிவாளி என்பதை அழகாக விளக்குகிறார். இறுதியில் அவளைப் "புழு" என உமிழ்ந்தும் விடுகிறார்.

இன்றைய ஆண்கள் தம் பிள்ளைகள் ஏதாவது தவறு செய்து விட்டால் மனைவியை விளித்து, "பாரடி, உன் பிள்ளை செய்த செயலை" எனவும், ஏதாவது பரிசு பெற்று வந்தால், "என் பிள்ளையைப் பார்த்தாயா?" எனவும் கூறக் கண்டுள்ளோம். அதே வழக்கம் பூமிக்கடியில் வாழ்ந்தாலும் மாறவில்லை என்பது "சூரியனில்" ஆத்மா நித்யாவைப் பார்த்து, "உன் பையனால் எத்தனை தொந்தரவு பார்" எனக் கேட்பதால் புலனாகிறது.

சபலம் என்பது எந்தக் காலத்திலும் ஆணை விட்டு அகலாது என்பதற்குக் "காலயந்திரம்" டாக்டர் எச்சரிக்கை ஒரு சான்று. ஆண் தன் மனைவியை எப்படிப் பாதுகாக்கிறான் என்பதற்கு "நகர்வலம்" ஆத்மாவின்





பழம்பெரும் தேசியத் தொண்டரும், கல்விப் பணியாளருமான, திரு ஆர். ஆர். அய்யர் அவர்களின் எழுபத்தாறாவது பிறந்த நாள் விழா அண்மையில் நடைபெற்றது. தமிழக ஆளுநர் திரு மோகன்லால் சுகாதியா தலைமை வகித்தார். பொன்னாடையையும் வெள்ளியில் செய்த நினைவுப் பொருளையும் திரு ஆர். ஆர். அய்யருக்கு ஆளுநர் வழங்கினார்.

சென்னை திருவல்லிக்கேணி இந்து உயர்நிலைப் பள்ளிக்காக திரு அய்யர் நிறுவிய அறக்கட்டளையைத் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு ஜி கருப்பையா மூப்பனார் அந்தப் பள்ளிக் குழுவின் தலைவர் திரு எஸ். பார்த்தசாரதி அய்யங்காரிடம் வழங்கினார்.



நடத்தை சான்று. (மார்பை மூடிக்கொள். ஜலதோஷம் பிடிக்கும்) அவர்களுக்கே உரித்தான ஊடல் எந்த யுகத்திலும் மாறாது.

**சித்தாந்தங்கள்; தத்துவங்கள்; சமுதாயச் சிந்தனைகள்:**

“எங்களது அன்றாட வாழ்க்கையை அமைத்து எங்களுக்கு எல்லாவிதமான பாக்கியங்களும் அளித்து வரும் கம்ப்யூட்டர் தாத்தாவுக்கு இன்றைய வந்தனங்கள்'' (ஒன்பதாவது பெண்) கம்ப்யூட்டரை உயர்த்துகிறாரா? அன்றி கடவுளைத் தாழ்த்துகிறாரா? காலம் முன்னேறினால் ஆசிரியரைப் பெயர் சொல்லியா அழைக்க வேண்டும்? (ஒன்பதாவது பெண்).

இருபதாம் நூற்றாண்டின் காட்டுமிராண்டித்தனத்தைக் கண்டிக்கிறார் சுஜாதா. கொஞ்சம் அதிகமாகவே கண்டிக்கிறார். ''இருபதாம் நூற்றாண்டு வரை மக்களில் பலர் காட்டுமிராண்டிகளாக வாழ்ந்தார்கள் எனக் கூறி நம்மைச் சிந்திக்க வைக்கிறார். இருபதாம் நூற்றாண்டின் நிர்வாணக் குழந்தையைக் காண்பித்து, சமுதாய ஏழ்மைகளைச் சாடுகிறார். போர் வெறியைக் கண்டிக்கிறார். போரினால் ஏற்பட்ட பயங்கர விளைவுகளால் மனிதன் பூமிக்கடியில் பயந்து மறைந்து வாழ வேண்டியிருந்தது என்றும், அதனால் அவனுக்கு இன்றுள்ளது போல் தண்ணீருக்கு ரேஷன், பேப்பருக்கு ரேஷன் என்று பலவற்றுக்கும் ரேஷன் ஏற்பட்டது எனவும் காண்பிக்கிறார். (சூரியன்) நாம் தினமும் காணும் சூரியனை அவர்கள் காண முடியாததற்குக் காரணம் நமது மிருகத்தனமான போர் வெறி என்றே சுட்டிக் காண்பிக்கிறார்.

எத்தனையோ கண்டுபிடிக்கிறார்கள். இருந்தாலும் கண்டு பிடிக்க முடியாததும் உள்ளது என்பதை ஒன்பதாவது பெண் கதை உணர்த்துகிறது:

''மனத்தைத் தனியாகக் கழற்றிக் கொடுத்துவிடவா!'' என அவள் வினவ,

''அதைத்தான் இன்னும் இவர்கள் கண்டு பிடிக்கவில்லை'' என்று ஆத்மா சொல்கிறார்.

''நமது இருவர் மனமும் ஒன்றாக உள்ளதே'' — இது நமக்குப் பழகிப் போனது.

''நாம் இருவரும் ஒரே அலை வரிசையில் இயங்குகிறோம்!'' — இது விஞ்ஞான யுகத்தில் நாம் பழக வேண்டிய ஒன்றாகும்.

பொருள் புலப்படாமல் ஓசைக்காக வார்த்தைகளைப் (பே)பாடும் கவிஞர்களைச் சாடுகிறார் ஆசிரியர்.

''சூரியன்'' என்றால் என்ன அர்த்தம்?

''தெரியாது. சும்மா ஓசைக்காக எழுதினேன்'' (சூரியன்)

1994ம் வருடத்திலும் கையூட்டு (இலஞ்சம்) இருக்கும் என்பதை ''ரூல் நம்பர் 17'' தெரிவிக்கிறது!

கற்பு என்பதற்கு ஆசிரியர் கொண்டுள்ள அர்த்தம் அடியவனுக்குப் புரியவில்லை.

''கற்புள்ள தமிழில்'' என்கிறார் (கேலியா?) ''வேலி நல்ல கற்புடன் ஆக்ரோஷமாக இருந்தது'' என்கிறார்.

விஞ்ஞான உவமைகளை அள்ளித் தெளித்திருக்கிறார். ''எல்லோரும் ஸ்விட்ச் போட்டாற்போல் சிரித்தார்கள்.'' — நம்மைச் சிரிக்க வைக்கின்றார்:

''ஈ இல்லை, அழிந்து விட்டது'' (கால யந்திரம்) எனக் கூறிச் சிரிப்பு மூட்டுகிறார். வரமாட்டேன்கிறது.

மதராஸ் பாஷையையும் பிக்பாக்கெட் அடிக்கும் தொழிலையும் கண்டிருக்கிறார். எனவே கண்டிக்கிறார். அனுபவம் பேசுகிறது போலும்.

தேவன் வருகையில் ''நீ நிர்வாணமாக வந்தாலும் ஒருவரும் உன்னைப் பார்க்கப் போவதில்லை'' என்பதால், தேவன்பால் அவர்கள் கொண்டுள்ள ஈடுபாடு புரிகிறது.

'கடவுள் இருக்கிறாரோ இல்லையோ... கோக்கோகோலா இருக்கிறது' என்ற போஸ்டர் ஓர் அதிர்ச்சி. ஆமாம். கோக்காகோலா என்ன அழியா வரம் பெற்றதா?

''முதல் தடவையாகக் கடவுள் அமைத்த சிருஷ்டி நியதியை மீறப் போகிறோம்'' என்ற வசனத்தால் என்னதான் கண்டு பிடிப்பினும் அதற்கும் ஓர் எல்லை உண்டு. வட்டத்துக்குள் வாழ்ந்துகொள். வட்டத்தை விட்டு வெளியே போகாதே! வட்டத்தில் விட்டம் வரை, பட்டம்வரை. ஆனால் அந்த நியதியை மீறாதே என்பது சுஜாதாவின் புத்திமதி. எதனைச் செய்தாலும் கடவுளின் கண்ணை மறைத்து விடலாம் என எண்ணாதே எனச் செப்புகிறார்.

மொத்தத்தில் ஒரு சிந்தனைக் கடல். நான் எடுத்த முத்துக்கள் கொஞ்சம்தான். எஞ்சிய முத்துக்கள் எத்தனையோ? — ப. **கந்தசாமி**

## அத்தியாயம் 1

# இரத்தின வியாபாரி

அமைதியான நீலக் கடலில் அழகிய அன்னப் பறவைபோல் வெள்ளைப் பாய் விரித்த கப்பல் மேற்கு நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. சூரியன் உதயமாகும் நேரம். அவனுடைய தேஜோமயமான வரவை எதிர்பார்த்துக் கீழ்வான முகட்டில் இயற்கைத் தேவி வர்ணக் கோலங்கள் போட்டுக் கொண்டிருந்தாள்.

கப்பலில் இருந்தவர்களிடையே பரபரப்பு அதிகமாய்க் காணப்பட்டது. அவர்கள் பெரும்பாலோர் வர்த்தகர்களாகக் காணப்பட்டார்கள். எல்லோரும் அவரவர்களுடைய மூட்டைகளை எடுத்து வைத்து, கப்பலிலிருந்து இறங்குவதற்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்கள். சிலர் கப்பல் மேல்தளத்தின் ஓரமாக வந்து, மேற்குத் திசையை ஆவலுடன் நோக்கினார்கள்.

இப்படி மேற்குத் திக்கை நோக்கி நின்றவர்களில் வாலிப வர்த்தகன் ஒருவன் காணப்பட்டான். பிராயம் இருபது, இருபத்தொன்று இருக்கலாம். அவனுடைய இளம் முகத்தில் களை சொட்டிற்று. அவனுடைய உடையிலிருந்தும், அவன் பக்கத்தில் கிடந்த மூட்டையிலிருந்தும்தான் அவனை வியாபாரி என்று சொல்லலாமே தவிர, மற்றப்படி தோற்றத்தை மட்டும் கவனித்தால் அவன் இராஜ குலத்தைச் சேர்ந்தவன் என்று சொல்லும்படியிருந்தது. அவன் வியாபாரியாயிருக்கும் பட்சத்தில், சாதாரண வியாபாரியாக இருக்க முடியாது; பெருஞ் செல்வந்தனான இரத்தின வியாபாரியாகத்தான் இருக்கவேண்டும். கப்பலிலிருந்த மற்றவர்கள் அடிக்கடி அந்த இளம் வர்த்தகன் நிற்கும் இடத்தை நோக்கினார்கள். அப்போது அவர்களுடைய கண்களில் பயபக்தி காணப்பட்டது. சிறிது கவலையும் தோன்றியது.

அந்த வாலிப வர்த்தகனோ மற்றவர்களையெல்லாம் சிறிதும் கவனிக்கவில்லை. கண் கொட்டாமல் மேற்குத் திக்கையே நோக்கிக் கொண்டு நின்றான். அவனுடைய முகத்திலேதான் எத்தனை ஆவல்? எவ்வளவு கிளர்ச்சி? அவ்வளவு ஆவலுக்கும் கிளர்ச்சிக்கும் என்னதான் காரணமாயிருக்கும்? நீண்ட காலம் அந்நிய நாட்டில் இருந்து விட்டுத் தாய் நாட்டுக்குத் திரும்பி வருகிறானோ இந்த வாலிபன்? ஜன்ம பூமியின் தோற்றம் எப்போது கண்ணுக்குப் புலனாகும் என்றுதான் இவ்வளவு ஆவலுடன் பார்த்துக் கொண்டிருக்கிறானோ?

ஆமாம்; அதுதான் உண்மையாக இருக்க வேண்டும். ஏனென்றால், அதோ கொஞ்ச தூரத்தில் கரு நிறமாக வரம்பு போல் காணப்படும் பூமியைக் கண்டதும் அவனுடைய முகம் மலர்வதைக் காண்கிறோம். சூரியனைக் கண்ட தாமரை இப்படித்தான் மலரும் போலும்!

சற்று நேரம் அப்படியே அசைவின்றி நிற்கிறான் அந்த வாலிப வியாபாரி.



ஆரம்பத்தில் வெறும் வரம்பாக மட்டும் தோன்றிய காட்சியானது வர வர மரங்கள், குன்றுகள், கோவில் கோபுரங்களாக மாறி வரும்போது, அவனுடைய உள்ளத்தில் ஆனந்தம் பொங்குவதை முகம் காட்டுகிறது. இதற்கிடையில் கிழக்கே சூரியனும் ஜகஜ்ஜோதியாக உதயமாகித் தன் வான யாத்திரையைத் தொடங்கினான்.

கரையையே பார்த்துக் கொண்டிருந்த வாலிபன் சட்டென்று திரும்பி நோக்கினான். கப்பலில் இருந்தவர்களில் பெரும்பாலோர் அச்சமயம் அவனையே கவனித்துக் கொண்டிருந்தார்களாதலால், அவன் ·சமிக்ஞை செய்ததும் உடனே நெருங்கி அவன் அருகில் வந்து பயபக்தியுடன் நின்றார்கள்.

''நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கிறதா?'' என்று வாலிபன் கேட்டான்.

''இருக்கிறது மகா....!'' என்று சொல்லத் தொடங்கிய ஒருவன் சட்டென்று வாயைப் பொத்திக் கொண்டான்,

''பார்த்தீர்களா? இதுதானா நீங்கள் என் கட்டளையை நிறைவேற்றுகிற லட்சணம்?'' என்று வாலிபன் கோபமாய்க் கேட்டான்.

''மன்னிக்க வேண்டும் சுவாமி!''

''என்னுடைய கட்டளையைச் சத்தியமாய் நிறைவேற்றுவீர்களா?''

''நிறைவேற்றுவோம், சுவாமி!''

''தாய்நாட்டில் இருக்கும்பொழுது என்னை நீங்கள் சந்திக்க முயலவே கூடாது, தெரியுமா?''

''தெரியும், சுவாமி!''

''ஒருவேளை தற்செயலாய்ச் சந்தித்தால் என்னைத் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளக் கூடாது.''

''சித்தப்படி நடக்கிறோம்.''



''அடுத்த அமாவாசையன்று எல்லாரும் இந்தத் துறைமுகத்துக்கு வந்து விடவேண்டும்.''

''வந்து விடுகிறோம்.''

''அன்று நான் எக்காரணத்தினலாவது கப்பலுக்கு வந்து சேராவிட்டால் என்னைப் பற்றி எவ்விதம் விசாரிப்பீர்கள்?''

''இரத்தின வியாபாரி தேவசேனர் என்று விசாரிக்கிறோம்.''

''இதிலெல்லாம் கொஞ்சம் கூடத் தவறக் கூடாது.''

''இல்லை, சுவாமி!''

மேற்படி வாலிப இரத்தின வியாபாரி உண்மையில் யார் என்பதை நேயர்கள் இதற்குள்ளாக ஊகித்துக் கொண்டிருக்கலாம். ஆம்; பார்த்திப மகாராஜாவின் புதல்வனும், தற்போது செண்பகத் தீவின் அரசனுமான விக்கிரமன்தான் அவன்.

* * *

சென்ற அத்தியாயத்தில் கூறிய சம்பவங்கள் நடந்து ஏறக்குறைய மூன்று வருஷங்கள் ஆகிவிட்டன. இந்த மூன்று வருஷத்தில் விக்கிரமனுடைய ஆட்சியில் செண்பகத் தீவு எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் கண்டு பெரும் புகழும் அடைந்து வந்தது. விக்கிரமனுடைய வரவுக்குப் பிறகு ஒரே ஒரு தடவை செண்பகத் தீவின் மீது பகைவர் படையெடுத்து வந்தார்கள். அவர்களுக்கு நேர்ந்த கதியை அறிந்தபிறகு செண்பகத் தீவின் மீது படையெடுக்க யாரும் துணியவில்லை. அதற்கு மாருக, விக்கிரமனுடைய தலைமையில் செண்பகத் தீவின் படைவீரர்கள் வேறு தீவுகளின் மேல் படையெடுத்துச் சென்று அந்தத் தீவுகளிலெல்லாம் புலிக்கொடியை நாட்டிவிட்டுத் திரும்பினர். விக்கிரமனுடைய வீரப் பிரதாபங்களையும், மேதா விலாசத்தையும், மற்ற உயர் குணங்களையும் பற்றிய கீர்த்தியானது தூர தூரத்திலேயுள்ள தீவாந்திரங்களிலெல்லாம் பரவத் தொடங்கியது. பல தீவுகளிலுள்ள ஜனங்கள் நல்லரசாட்சியையும், பாதுகாப்பையும் விரும்பித் தாங்களே விக்கிரமனுடைய ஆட்சிக்குள் வந்து கொண்டிருந்தனர்.

இந்த மூன்று வருஷ காலத்தில் விக்கிரமன், தன்னுடைய தாயாரையாவது தாய்நாட்டையாவது மறந்து விடவில்லை. மற்றும், பல்லவ சாம்ராஜ்யத் தலைநகரின் வீதியில் அவன் கண்ட இள நங்கையின் சந்திர வதனத்தையும் அவனால் மறக்க முடியவில்லை. செண்பகத் தீவின் பிரஜைகள் தங்களுடைய பாக்கிய வசத்தினால் கிடைத்த புதிய அரசனின் வம்சம் நீடூழி விளங்க வேண்டுமென்னும் ஆசையுடன், விக்கிரமனுடைய விவாகத்தைக் குறித்துச் சில முறை விக்ஞாபனம் செய்து கொண்டார்கள். மகாராஜா விடை கொடுத்தால், தாய்நாட்டுக்குச் சென்று சிறந்த அரச குலத்துப் பெண்ணை மணம் பேசி வருவதாகவும் சொன்னார்கள். அப்போதெல்லாம் விக்கிரமன் அவர்களுடைய விக்ஞாபனத்தை மறுதளித்து விவாகத்தைப் பற்றித் தன்னுடைய பரிபூரண வெறுப்பையும் தெரிவித்தான். இதற்கு அடிப்படையான காரணம், அந்தக் காஞ்சி நகர்ப் பெண்ணினுடைய கருவிழிகளின் ஞாபகந்தானே, என்னவோ, யாருக்குத் தெரியும்?

நாளாக ஆக, விக்கிரமன் செண்பகத் தீவில் தன்னுடைய தனிமையை அதிகமாய் உணரத் தொடங்கினன். எவ்வளவோ ஜனக் கூட்டத்துக்கு நடுவில் இருந்தும் தான் துணையின்றித் தனித்திருப்பதை அவன் கண்டான். வெற்றியும், புகழும், செல்வாக்கும், இரளான மக்களின் போற்றுதலும் இருந்தும் அவனுடைய இதயத்தில் நிறைவு ஏற்படவில்லை. அதில் ஒரு மூலை சூன்யமாக இருந்தது. அந்தச் சூன்ய மூலையானது நாளுக்கு நாள் பெரிதாகிக் கொண்டு வந்தது. ''நீண்ட நயனங்களையுடைய அந்தப் பெண் மட்டும் இங்கே என் அருகில் இருந்தால்?''— என்ற எண்ணம் அடிக்கடி உண்டாயிற்று. அது அவனுக்கு அளவிலாத வேதனையை அளித்தது. அந்த வேதனை தரும் எண்ணத்தை அவனால் மறக்க முடியாமல் இருந்ததோடு, அந்த வேதனையின் நடுவிலேயே ஒருவித இன்பமும் இருப்பதை அவன் உணர்ந்தான். தன்னை அறியாமல் அடிக்கடி அவன் பெருமூச்சு விட்டான். சில சமயம் அவனுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பெண்ணின் முகம் அவன் மனக் கண்ணின் முன்னால் தோன்றும்போது, அவனுடைய இருதயமானது விரிந்து பொங்கி மேல்நோக்கி எழுந்து நெஞ்சை அடைத்து விடுவது போல் உணர்ச்சி உண்டாகும்.

வேதனையுடன் இன்பம் கலந்து உண்டாகிய இந்த ஞாபகத்தை அவன் ஓரளவு மறப்பதற்கு உதவியான ஒரு சம்பவம் இரண்டு மாதங்களுக்கு முன்பு நேர்ந்தது.

ஒரு நாள் இரவு விக்கிரமனுடைய கனவில் அருள்மொழி ராணி தோன்றி

# தசைப் பிடிப்பா?



# ஆற்றுவது அயொடெக்ஸ்

## தேய்த்து ஆற்றும் நிவாரணம்.

வலி தணிக்கும் களிம்புகள் பல இருக்கலாம்; ஆனால் வலி தணித்து அதே சமயம் ஆற்றிவிடுவது அயொடெக்ஸ். ஆற்றக் காரணம் அதில் உள்ள அயொடின்.

தசை வலிக்கும் சரி, மூட்டு சோர்வுக்கும் சரி, - ஆற்றும் களிம்பு ஒன்றுதான்: அயொடெக்ஸ்.




**போடுவீர் அயொடெக்ஸ், புறப்படுவீர் ஓடியாட.**

# எங்கும் இதே பேச்சு!

உங்கள் வீட்டுக்காரர்
ஏதோ திட்டத்தில்
சேர்ந்திருக்கிறாராமே?

ஆமாம், தமிழ்நாடு
சமூகப் பாதுகாப்புத்
திட்டத்திலே சேர்ந்திருக்
கிறார், அத்திட்டம்
எங்களுக்கு 30 ஆண்டுகளுக்கு
சீரான மாத வருமானமும், கூட
மொத்தப் பணமும் அளிக்கும்.



### உங்கள் எதிர்காலக் கவலை நீங்க

# தமிழ்நாடு சமூகப் பாதுகாப்புத் திட்டம்

உதாரணமாக நீங்கள் மாதம் 60 ரூபாய் வீதம் 10வருஷம் செலுத்தினால் ஒவ்வொரு மாதமும் ரூ. 100 வீதம் 30 வருஷம் ஓய்வு ஊதியமாக இத்திட்டம் திரும்ப அளிக்கிறது. அது தவிர ரூ. 9500ம் மொத்தமாகக் கிடைக்கிறது. இதோ 7வகைத் திட்டங்கள் உள்ளன. உங்களுக்கு உகந்ததைத் தேர்ந்தெடுங்கள்.

| திட்டம் | A | B | C | D | E | F | G |
|---|---|---|---|---|---|---|---|
| மாதச் சந்தாத் தொகை (ரூபாய்) | 10 | 10 | 10 | 10 | 20 | 30 | 60 |
| சந்தாக் கால அளவு (ஆண்டுகள்) | 10 | 15 | 20 | 25 | 20 | 15 | 10 |
| மாத ஓய்வு ஊதியம் 30 ஆண்டுகளுக்கு (ரூபாய்) | 20 | 35 | 60 | 100 | 100 | 100 | 100 |
| இறுதியில் கிடைக்கும் மொத்த ரொக்கத் தொகை (ரூபாய்) | 1500 | 2500 | 4000 | 5500 | 8000 | 8000 | 9500 |

சந்தாத் தொகையை அரசின் சப்டிரஷரியிலோ அல்லது இத்திட்டத்தில் பங்குபெறும் பாங்கியிலோ செலுத்தலாம்.

மேற்கொண்டு
விபரங்களுக்கு
அணுகுங்கள்:



இயக்குநர்
சமூகப் பாதுகாப்புத் திட்டம்
தமிழ் நாடு அரசு.

4வது மாடி, குறளகம்,
சென்னை 600 001.
போன்: 20884

TSSS 534



**கங்கணமா? கவசமா?**

கங்கண மணிக்கரம்
பங்கய எழில் முகம்
மங்கல நுதல் சின்னம்
சங்கென மிளிர் கண்டம்
தங்கமென ஒரு மனம்
அங்கமெலாம் சொர்ணம்
சிங்கமன்ன எண்ணம்
இங்கிருக்கும் திண்ணம்!

அகலமாகக் கங்கணம் அணிவது தான் இப்போதெல்லாம் ஃபாஷனும். அதற்காகப் பழங்காலத்தில் போர் வீரர்கள் பாதுகாப்புக்காக அணியும் கரக் கவசம் போல் அத்தனை அகலமாகவா அணிவது!

— மேலட்டை வண்ணப்படம்: உத்ரா

ளுள். மகாராணிக்குரிய ஆடை ஆபரணங்கள் ஒன்றுமில்லாமல், தூய வெள்ளைக் கலை உடுத்தி விபூதி ருத்திராட்ச மணிந்து அவள் சிவ பக்தியில் கலந்த சிவ விரதையாகக் காட்சி தந்தாள். முன் எப்போதையும் விட அவளுடைய முகத்தில் தேஜஸ் அதிகமாக ஜொலித்தது. நாவில் நமசிவாய மந்திரத்தை ஜபித்துக் கொண்டு அருள்மொழித் தேவி விக்கிரமனைக் கனிவு ததும்ப நோக்கி, "குழந்தாய்! எனக்கு விடை கொடு!" என்றுள். விக்கிரமன் ஒன்றும் புரியாமல் திகைத்து, "அம்மா! இத்தனை நாட்கள் கழித்து இப்போதுதானே உன்னைப் பார்த்தேன். அதற்குள் போக விடை கேட்கிருயே? எங்கே போகப் போகிருய்?" என்றுன். அருள்மொழி ராணி அதற்கு விடை கூருமல், "அப்பா! குழந்தாய்! நான் ஒரு வாக்குறுதி கொடுத்து விட்டேன். அதை நீ நிறைவேற்றித் தரவேண்டும். முக்கியமாக அதன் பொருட்டே உன்னைப் பார்க்க வந்தேன்" என்றுள்.

"என்ன வாக்குறுதி அம்மா? யாருக்குக் கொடுத்தாய்?"

"சக்கரவர்த்தியின் மகள் குந்தவியை நீ கல்யாணம் செய்துகொள்ள வேண்டும்!"

விக்கிரமன் திடுக்கிட்டு, "என்ன அம்மா சொல்கிருய்! சக்கரவர்த்தி மகளுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? யாருக்கு இம்மாதிரி வாக்குறுதி கொடுத்தாய்?" என்று கேட்டான்.

"சிவனடியாருக்குக் கொடுத்தேன், குழந்தாய்! இராமபிரான் தகப்பனுரின் வாக்கை நிறைவேற்றியதுபோல் நீ என்னுடைய வாக்கைக் காப்பாற்ற வேண்டும்."

இவ்விதம் சொல்லிவிட்டு அருள்மொழித் தேவி விக்கிரமனுடைய அருகில் நெருங்கி அவனுடைய சிரஸின் மீது கையை வைத்து ஆசீர்வதித்தாள். உடனே, விக்கிரமன் கண் விழித்து எழுந்தான். "நல்லவேளை! இதெல்லாம் கனவாய்ப் போயிற்றே!" என்று சந்தோஷப்பட்டான்.

கனவில் கண்டதெல்லாம் வெறும் சித்தப் பிரமை என்பதில் ஐயமில்லை. பழைய பேச்சுக்களும் நினைவுகளும் குழம்பி இப்படிக் கனவாகத் தோன்றியிருக்க வேண்டும். இல்லா விட்டால் இத்தனையும் நடந்த பிறகு "சக்கரவர்த்தி மகளைக் கல்யாணம் செய்து கொள்" என்று தாய் தனக்குக் கட்டளை இடுவாளா? இதைப் பற்றிச் சிவனடியாருக்கு அவள் ஏன் வாக்குக் கொடுக்க வேண்டும்?

ஆனாலும் இந்தக் கனவுதான் விக்கிரமன் காஞ்சி நகர்ப் பெண்ணின் நினைவை ஒருவாறு மறப்பதற்கு உதவி செய்தது. கனவு கண்டது முதல், அவனுக்குத் தன் அன்னையைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை மிகுந்தது. அவள் எங்கே இருக்கிருளோ? தன்னைக் காணுமல் எவ்விதம் பரிதவிக்கிருளோ?

அன்று முதல் தாய்நாட்டுக்குத் திரும்பிப் போக வேண்டும் என்ற ஆர்வம் விக்கிரமனுடைய உள்ளத்தில் பொங்கத் தொடங்கிற்று. போய், அன்னையை இங்கே அழைத்துக் கொண்டு வந்து விடலாம்; தந்தை கொடுத்து விட்டுப் போன சோழர் குலத்து வீர வாளையும், திருக்குறளையும் எடுத்துக்கொண்டு வரலாம்! இவ்விதம் தீர்மானித்துக் கொண்டு மந்திரி பிரதானிகளிடமும் மற்றுமுள்ள முக்கிய பிரஜைகளிடமும் தன் தீர்மானத்தைத் தெரிவித்தான். அவர்கள் எவ்வளவோ ஆட்சேபித்தும், விக்கிரமனுடைய உறுதியை மாற்ற முடியவில்லை. "ஒரு வேளை திரும்பி வரும்பொழுது உங்

# பூர்வ கதை

பார்த்திப சோழ மகாராஜா, காஞ்சி நரசிம்ம சக்கரவர்த்திக்குக் கப்பம் செலுத்த மறுத்து, வெண்ணாற்றங்கரைப் போர்க்களத்தில் வீர சுவர்க்கம் அடைகிறார். ரண களத்தில் அவருடைய உயிர் நீங்கப் போகும் தருவாயில் தரிசனம் தந்த சிவனடியாரிடம் தம்முடைய மகன் விக்கிரமனை வீர புருஷனாக வளர்க்க வேண்டுமென்று வரம் வாங்கிக் கொண்டு உயிர் விடுகிறார்.

பார்த்திப சோழரின் பத்தினி அருள்மொழி ராணி, தன் மகன் விக்கிரமனுடன், உறையூருக்குக் கிழக்கே கொஞ்ச தூரத்தில் இருந்த காவேரி நதித் தீவில் வஸந்த மாளிகையில் வசித்து வந்தாள். அங்கு சிவனடியார் அடிக்கடி வந்து விக்கிரமனுக்கு வீர சுதந்திர உணர்ச்சியை ஊட்டி வருகிறார்.

விக்கிரமன் பதினெட்டாம் பிராயத்தைக் கடந்த போது, சிராப்பள்ளி மலையில் புலிக் கொடியை உயர்த்திச் சோழ நாட்டின் சுதந்திரத்தை ஸ்தாபிக்கத் தீர்மானிக்கிறான். பார்த்திப மகாராஜாவின் மாற்றுந் தாய் மகனான மாரப்ப பூபதி பல்லவ சேனாதிபதியிடம் விக்கிரமனுடைய உத்தேசத்தை வெளிப்படுத்தி விடுகிறான். இதன் பயனாக, விக்கிரமனுடைய முயற்சி தோல்வியடைகிறது.

காஞ்சி நகரின் வீதியில் சங்கிலிகளால் பிணிப்புண்டு குதிரை மேல் சென்ற விக்கிரமனை, நரசிம்ம வர்மரின் மகள் குந்தவி தேவி சந்திக்கிறாள். விக்கிரமனைத் தண்டனையிலிருந்து தப்புவிக்க அவள் செய்த முயற்சி பலிக்காமற் போகிறது. விக்கிரமன் தேசப் பிரஷ்ட தண்டனைக்கு உள்ளாகிறான்.

மாமல்லபுரத்துக் கடற்கரையில் விக்கிரமன் கப்பலில் ஏற்றப்படுகிறான். கப்பல் புறப்படும் சமயத்தில் கரையில் நின்ற சிவனடியார் தமது கரங்களைத் தூக்கி அவனை ஆசீர்வதிக்கிறார். இதைப் பார்த்த குந்தவி தேவி, இந்தச் சிவனடியார்தான் விக்கிரமனுடைய துரதிர்ஷ்டங்களுக்கெல்லாம் காரணம் என்று எண்ணி, அவர் யார் என்று கண்டு பிடிக்கத் தீர்மானிக்கிறாள்.

விக்கிரமனை ஏற்றிச் சென்ற கப்பல் செண்பகத் தீவின் அருகில் அவனை இறக்கி விட்டுச் செல்கிறது. விக்கிரமன் செண்பகத் தீவின் பிரஜைகளால் அரசனாக முடி சூட்டப்படுகிறான்.

விக்கிரமனுக்கு வயது வந்த பின் கொடுக்க வேண்டுமென்று பார்த்திப மகாராஜா சொல்லியிருந்த சோழ வம்சத்து வீர வாளையும், திருக்குறளையும் உறையூர் அரண்மனையிலிருந்து கொண்டு வரும்படி படகோட்டி பொன்னனிடம் அருள்மொழி ராணி சொல்கிறாள். இந்த முயற்சியின் போது மாரப்பனிடம் அகப்பட்டுக் கொள்ள இருந்த படகோட்டி பொன்னனைச் சிவனடியார் தப்புவிக்கிறார்.

அருள்மொழி ராணி தன்னைக் காண்பதற்கு வந்த சிறுத் தொண்டருடனும் அவருடைய பத்தினியுடனும் ஸ்தல யாத்திரை செல்கிறாள்.

வீர வாளும், திருக்குறளும் அடங்கிய பெட்டி படகோட்டியிடம் இருக்கிறது.

---

களுக்கு ஒரு மகாராணியை அழைத்துக் கொண்டு வந்தாலும் வருவேன்'' என்று விக்கிரமன் விளையாட்டாகச் சொன்னது அவர்களுக்கு ஒருவாறு திருப்தி அளித்தது. ஆகவே, தாய்நாட்டுக்குப் போகச் சகல வசதிகளுடன் வர்த்தகக் கப்பல் ஒன்று சித்தமாயிற்று. அந்தக் கப்பலில் இரத்தின வியாபாரியாக வேஷம் பூண்டு விக்கிரமன் பிரயாணமானான். வர்த்தக வேஷம் தரித்த மெய்க் காவலர் சிலரும், செண்பகத் தீவின் நிஜ வியாபாரிகள் சிலரும் அவனுடன் கப்பலில் புறப்பட்டார்கள்.

தாய்நாட்டின் எந்தத் துறைமுகத்தில் இறங்குவது என்பது பற்றிக் கொஞ்சம் சர்ச்சை நடந்தது. விக்கிரமன் முக்கியமாகப் போக விரும்பிய இடம் உறையூராதலால், நாகப் பட்டினம் துறைமுகத்தில் இறங்கலாம் என்று மற்றவர்கள் சொன்னார்கள். ஆனால், விக்கிரமனோ மாமல்லபுரத்துக்கே போக வேண்டும் என்றான். அவன் குழந்தையாயிருந்த காலத்திலிருந்து மாமல்லபுரத்துச் சிற்ப வேலைகளைப் பற்றிக் கேட்டிருந்தான். அவற்றைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அவனுக்கு நெடுநாட்களாக உண்டு. பல்லவ வீரர்கள் அவனைச் சிறைப்படுத்திக் கொண்டு வந்து மாமல்லபுரத்துக் கடற் கரையில் கப்பலேற்றியபோதே, ''ஐயோ! இவ்வூரின் சிறந்த சிற்பங்களைப் பார்க்காமல் போகிறோமே?'' என்று வருந்தினான். இப்போது அங்கே இறங்கினால் அந்த ஆசை நிறைவேறுமல்லவா?

இதுவன்றி இன்னொரு முக்கிய நோக்கமும் இருந்தது. தாய்நாட்டிலிருந்து சிறந்த சிற்பிகளையும், சித்திரக்காரர்களையும் செண்பகத் தீவுக்கு அழைத்துப்போக அவன் விரும்பினான். நாளடைவில் செண்பகத் தீவை ஓர் அற்புதச் சிற்பக் கூடமாகவே செய்து விட வேண்டும் என்பது அவன் கொண்டிருந்த மனோரதம். அத்தகைய சிற்பங்களையும் சித்திரக்காரர்களையும் மாமல்லபுரத்திலல்லாமல் வேறு எங்கே கண்டு பிடிக்க முடியும்? சோழநாடுதான் இப்போது பழைய பெருமையெல்லாம் போய்ப் பாழடைந்து கிடக்கிறதே!

இதையெல்லாம் தவிர, ஒருவேளை விக்கிரமன் மாமல்லபுரத்தில் இறங்க விரும்பியதற்கு இன்னொரு காரணமும் இருந்திருக்கலாம். காஞ்சி நகர் வீதியிலும், பின்னர் மாமல்லபுரத்துக் கடற்கரையிலும் அவன் பார்த்த இளநங்கையை மீண்டும் ஒருகால் பார்க்கக் கூடுமோ என்ற ஆசை அவன் உள்ளத்தின் அடிவாரத்தில் கிடந்திருக்கக் கூடும். இது விக்கிரமனுக்கே கூடத் தெரியாமல் இருக்கலாம். மனித உள்ளத்தின் அந்தரங்க மர்மம் அனைத்தையும் அறிந்து விட்டதாக யார்தான் சொல்ல முடியும்? (தொடரும்)

## காட்சி 10 (தொடர்ச்சி)

(ஏழுமலை நாயுடு வீடு.)

சர்மா: கல்யாணி! இவன் என் பையன் அம்மா...வளவளவென்று பேசி விருப் பானே.

கல்யாணி: தமாஷாப் பேசறுர்.

சர்மா: கிறுக்குப் பயலா இருக்காங்கிறதை நாசூக்காச் சொல்றியா?

(உள்ளே போகிறுர்.)

ஆனந்த்: என்னங்க இது? திடீர் திடீர்னு உங்க முகத்திலே சோகம் இழையோடுதே. என்ன காரணங்க?

கல்யாணி: நான் நல்லாத்தானே இருக்கேன்!

ஆனந்த்: பார்க்க நல்லாத்தான் இருக்கீங்க. ஆனு... மனசுலே எதையோ போட்டுப் பொருமிக்கிட்டிருக்கீங்க.

கல்யாணி: நீங்க சைகாலஜிஸ்டா?

ஆனந்த்: இல்லே, நான் மெடலர்ஜிஸ்ட்.

கல்யாணி: அப்படின்னு...?

ஆனந்த்: பி.எஸ்ஸி. முதல் வருஷம் படிச்சிருக்கேங்கிறீங்க. மெடலர்ஜிஸ்ட்னு தெரியாது? உலோகங்களின் தன்மை, அவற்றின் சக்தி, அவற்றைப் பரிசுத்தப்படுத்தற முறை — இதெல்லாம் அதுக்குள்ளே அடக்கம்!

கல்யா: எந்த உலோகத்துல களிம்பு பிடிக்கும். எதுல புடிக்காது. இப்படியா?

ஆனந்த்: அப்படியும் சொல்லலாம்!

கல்யா: ஓர் உலோகத்தைப் பார்த்தவுடனே இது பரிசுத்தமானதா, கலப்படமில்லாததா, அப்பாஉன்னு கண்டுபிடிச்சிடுவீங்களா?

ஆனந்த்: பார்த்தவுடனே கண்டுபிடிக்க நான் என்ன ஞானியா? சோதனைச் சாலையில் டெஸ்ட் பண்ணித்தான் கண்டு பிடிக்கணும்.

கல்யா: உலோகங்களைச் சோதனை பண்ணற மாதிரி மனிதர்களையும் ரசாயனச் சாலையில் சோதனை பண்ணினு...?

ஆனந்த்: மனிதர்கள் எல்லாம் எரிஞ்சு போயிடுவாங்க.

கல்யா: ஏன்?

ஆனந்த்: ஆமா. மனுசன் தலையில் நைட்ரிக் ஆஸிட்டையும் சல்பூரிக் ஆஸிட்டையும் ஊத்தினு என்ன ஆகும்? பஸ்மமாக வேண்டியதுதான்.

கல்யா: அப்ப மனிதர்கள் நல்லவரா, கெட்டவரான்னு கண்டுபிடிக்க எந்த வழியும் இல்லையா?

ஆனந்த்: ஏன் இல்லே... பழகினு, நெருங்கிப் பழகினு கண்டுபிடிக்கலாம்....





"நீங்க சைகாலஜிஸ்டா?"
"இல்லே, நான் மெடலர்ஜிஸ்ட்!"



தான் மாலேயிட்டா இட்டேரி முத்துவை ஜெயிச்சவருக்குத் தான் மாலேயிடுவேன்னு சொல்லிட்டானே!"

# அவன் பார்த்துப்பான்

கோமல் சுவாமிநாதன்




''சிவராமா! பட்டுப்போச்சுன்னு நினைச்ச கல்யாணியின் மனசிலே நம்பிக்கை துளிர் விட ஆரம்பிச்சிருக்குடா''

(சர்மாவின் கம்மப்புக் குரல் கேட்கிறது.)

ஆனந்த் (சற்று உரத்த குரலில்): அப்பா! அப்போ நான் போயிட்டு வர்றேன்!

(ஆனந்த் வெளியேறக் கல்யாணி போகிறாள். சிவராமன் வருகிறான்.)

சர்மா (கையைத் துண்டால் துடைத்தவாறு வந்துகொண்டு): சிவராமா... பட்டுப் போச்சுன்னு நினைச்ச கல்யாணியின் மனசிலே நம்பிக்கை துளிர்விட ஆரம்பிச்சிருக்குடா... (சிவராமன் மௌனம்.) என்ன, போன இடத்தில் என்ன ஆச்சு...? டிஸ்மிஸலா, ராஜிநாமாவா?

சிவ: ராஜிநாமாதான் ஸார்.

சர்மா: ஆண்டவன் உனக்கு உதவி பண்ணுவான் அப்பா.

சிவரா: ஆண்டவன்! அந்தப் பெண் கற்பழிக்கப்பட்டபோது அவுங்க மூணு பேரு தலையிலும் இடி விழுந்திருந்தா ஆண்டவன் பார்த்துப்பான்னு எனக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்கும்.

சர்மா: அற்புதங்கள் நடந்தாத்தான் நீங்கள்ளாம் ஆண்டவனை உணருவீங்க. இல்லையா? சரி, முடிவா நீ சொக்கலிங்கத்துக்கிட்ட என்னதான் சொல்லிட்டு வந்தே?

சிவரா: அவர் என் வாழ்க்கையையே சின்னா பின்னப்படுத்திடுவேன்னு சொன்னார்.. அப்படி அவர் செய்தா நித்யாவுக்கும் தீபாவுக்கும் கல்யாணம் நடக்காது; அதனால் தீபா வாழ்நாள் எல்லாம் சித்ரவதைப்பட வேண்டி வரும்னு சொல்லிட்டு வந்தேன்.

சர்மா: அதைச் சொல்ல உனக்கேது உரிமை?

சிவரா: ஏன் இல்லே? என் தம்பி அவன்! தீபாவை நீ கல்யாணம் செய்து கொள்ளக் கூடாதுன்னு சொன்னா அதை அவன் மறுத்திடுவானா?

(நித்யானந்தம் 'அண்ணா அண்ணா' என்று கூப்பிட்டுக் கொண்டே வருகிறான்.)

வா, நித்யா... நடந்த விஷயங்களைக் கேள்விப்பட்டியா?

நித்யா: கேள்விப்பட்டேன். ஆனால் இது உனக்கும் சொக்கலிங்கத்துக்கும் உள்ள நேரடிப் பிரச்னை. அதில் என்னையும் தீபாவையும் நீ இழுத்திருக்கவே கூடாது. அது தப்பு.

சிவரா: அந்தப் பெண்ணை இந்த வீட்டிச் அழைத்துக் கொண்டு வந்து, அவளுக்கு நியாயம் தேடுறேன்னு சொல்றேனே, அதுவே தப்புங்கிறியா?

நித்யா: இல்லே.

சிவரா: அவளுக்கு ஆதரவா நான் சொக்கலிங்கத்தையும் பிரசாத்தையும் எதிர்க்கிறது தப்புன்னு சொல்றியா!

நித்யா: இல்லே.

சிவரா: என் வாழ்வைச் சின்னாபின்னப் படுத்தினா நித்யாவும் தீபாவும் திருமணம் செய்துகொள்ள முடியாதுன்னு சொன்னேனே, அது தப்பா?

நித்யா: அதுதான் தப்பு.

சிவரா: அப்போ என்ன ஆனாலும் அந்தப் பெண்ணைக்கல்யாணம் செய்துக்கப்போறே!

நித்யா: நிச்சயமா! அவள் அப்பன் அயோக்கியனா இருக்கலாம்; அவள் அண்ணன் காமாந்தகாரனாக இருக்கலாம். அதுக்காக அந்தப் பெண் என்ன செய்யும்?

சிவரா: இந்தக் கல்யாணம் நடக்காதுன்னு நான் சொக்கலிங்கத்துக்குச் சவால் விட்டு வந்திருக்கேன்.

நித்யா: என்னுடைய அனுமதி இல்லாமல் எப்படி நீ சவால் விடலாம்?

சிவரா: நான் சொன்னா நீ கேட்பேங்கிற ஒரே நம்பிக்கைதான்.

நித்யா: நிச்சயமா நீ சொன்னா நான் கேட்பேன்.

சிவரா: அப்ப அந்தப் பெண்ணை மறந்துடு.

நித்யா: எதுக்காக? காரணம் சொல்லு!

சிவரா: காரணம் உனக்குத் தெரியாதா?

நித்யா: கல்யாணிக்குக் கொடுமை இழைக்கப்பட்டதில் தீபாவினுடைய பங்கு என்ன? அப்பனும் அண்ணனும் செய்த பாவத்துக்கு அவ என்ன பண்ணுவா?

சிவரா: அதனாலே! தீபாவைக் கல்யாணம் செய்துக்கிட்டு அந்த அயோக்கியக் கும்பலுக்கு நீ மாப்பிள்ளையாகப் போறியா?

நித்யா: தீபாவைக் கல்யாணம் செய்து கொள்வேன். ஆனால் அந்தக் கும்பலுக்கு மாப்பிள்ளை ஆகமாட்டேன்.

சிவரா: அது எப்படி முடியும்?

நித்யா: ஏன் முடியாது? என்னை நம்பிக் கட்டின புடவையோடு தீபா இங்கே வரத் தயாராக இருந்தால்...?

சிவராமன் (சிரித்து): நடைமுறைக்கு ஒவ்வாத அருமையான 'ஜோக்'. ஒரு லட்சாதிபதியின் மகள் எல்லாத்தையும் விட்டுட்டு உன்கூட....!

நித்யா: அண்ணா! பெண்களைப் பத்தின அநுபவம் உனக்குப் போதாது!... தீபா, தீபா!

(தீபா வருகிறாள்.)

அண்ணா! இவள் உன் தம்பியைக் கல்யாணம் செய்துக்கிட்டு அவன் மனைவியா வாழ வந்திருக்கா. அவளை வாழ்த்தி வீட்டுக்குள்ளே அழைச்சுக்க.

சிவரா: தீபா!

தீபா: அவருடைய வாழ்க்கையிலே 'த்ரில்' இல்லேன்னு சொன்னீங்களே! நாங்க இரண்டு பேரும் முடிவெடுத்துச் செய்த 'த்ரில்' இது.

சிவரா: தீபா...நீ... நித்யாவை நம்பி உன் வீட்டை விட்டுட்டு...

தீபா: ஆமா சார்... கல்யாணிக்கு இழைத்த அநீதிக்கு என் குடும்பமே ஏன் காரணமா இருக்கணும்? நானாவது தனித்து நிற்கலாம்னு வந்துட்டேன்.

நித்யா: இப்ப சொல்லு! நான் செய்தது தப்பா...? கல்யாணிக்கு நீ நியாயம் தேடுற முயற்சியிலே நாங்களும் பங்கு கொள்கிறோம். அதை விட்டுட்டு இந்தக் கல்யாணமே நடக்காதுன்னு சொல்றதில் என்ன லாபமிருக்கு?

சிவரா: நித்யா! தப்புக் கணக்குப் போட்டதற்கு என்னை மன்னிச்சுடு! தீபா! உயர்ந்த உள்ளம் படைத்தவள் நீ!

நாயுடு (இவ்வளவையும் ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்தவர் பிரவேசித்து): சிவ

ராமப்பா!...கல்யாணத்தை எப்ப வைச்சுக்கலாம்?

தீபா: சார்! ஆனால் இன்னும் கொஞ்ச நாளைக்கு நான் அந்த வீட்டிலே வாழ்ந்தாகணும். நான் அந்த வீட்டிலே இருந்தாத்தான் கோர்ட்டிலேயும் கல்யாணிக்கு நியாயம் கிடைக்க ஏதாவது தடயம் கிடைக்குமான்னு என்னால கண்டுபிடிக்க முடியும்.

சர்மா: சிவராமன்! இப்போ ஆண்டவனுடைய நிழல் இந்த வீட்டுல லேசாப் படியுதே. அதைக் கவனிச்சியா?

சிவரா: நீங்க என்ன சொல்றீங்க, சர்மா?

சர்மா: சூரியோதயத்துக்கு முன்னால அருணோதயம் ஆகும். அதுபோல் தீபா இங்கே அருணோதயமா வந்திருக்கா. தெய்வமும் மனித உருவில் வரும்கிறதை இப்போதாவது நம்பு.

ஏழுமலை: நான் நம்பறேன். ஆனால் தெய்வம் தெய்வ உருவத்திலே எப்போ வரும்?

## காட்சி 11

(பிரசாத்தின் தனி அறை. பிரசாத், நீலகண்டன், கானமேகம் மூவரும் கூடிப் பயங்கரமாகச் சிரிப்பொலி எழுப்புகின்றனர்.)

பிரசாத்: எழுபத்திரண்டு மணி நேரத்துக்குள்ள நாம போலீசில போய்ச் சரணடையல்லேன்னா ஏதோ பூகம்பமே ஏற்படுமீ

"அப்போ என்ன ஆனாலும் அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்துக்கப்போறே!"

"நிச்சயமா! அவள் அப்பா அயோக்கியனாயிருக்கலாம். அவள் அண்ணன் யாரந்தகாரனா இருக்கலாம். அதுக்காக அந்தப் பெண் என்ன செய்யும்?"



என்று பேசிறுனே சிவராமன். அது என்னடா ஆச்சு?

காளமேகம்: டே, நாமதான் போலீசுல சரணடையலியே. இப்ப அவன் தனிப்பட்ட முறையில கேஸ் போட்டா...?

பிரசாத்: போடட்டுமே! போட்டால் கல்யாணியின் பேரு சந்தி சிரிக்கும். நாம குறிப்பிட்ட தினத்தில நந்தி ஹில்ஸுக்குப் போகலேங்கறதை ப்ரூவ் பண்ணிட்டுப்போறோம்!

நீலகண்டன்: எப்படி?

பிரசாத்: குற்றாலத்தில எனக்குத் தெரிஞ்ச லாட்ஜ் ஓனர் இருக்கார். குறிப்பிட்ட தினத்தில நாம மூணு பேரும் குற்றாலத்தில தங்கியிருந்ததாக லாட்ஜ் ரிக்கார்டுகளை மாத்தப் போறேன்.

நீலகண்: வெரிகுட் ஐடியா. பிரமாதமான அலிபை.

தீபா (பிரவேசித்தவாறே): ரொம்பப் பெருமைப்பட்டுக்காதீங்க, அண்ணு! சட்டமும் கோர்ட்டும் அவருக்கு உதவி புரியலேன்னு அவர் இந்த விஷயத்தைப் பத்திரிகையிலே எழுதுவார். அதன் மூலம் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்குவார்.

பிரசாத்: தீபா, நீ ஏன் இங்கே வந்தே?

தீபா: இது என்ன, கள்ளர் குகையா? நான் வரக் கூடாதா? உன்னைப் பார்க்க யாரோ இரண்டு பேர் வந்திருக்காங்க. கூட்டிட்டு வந்தேன்.

பிரசாத்: யாரது?

(ஏழுமலை நாயுடுவும் ரங்கநாயகியும் வருகிறார்கள்.)

ரங்க: நாங்கதாம்ப்பா! மவராசனுகளே! நல்லா இருக்கிங்களா?

ஏழுமலை: நல்லா இருக்க அவனுகளுக்கு என்ன? காலேயில பன்னிரண்டு ரூபாய்க்கு நாஸ்தா துன்றானுக. கொழுத்திருக்கானுக. ஒதியம் போத்து மாதிரி. எங்கியாவது போறேம், விறகுவெட்டிறேம்னு இல்லே. எங்கடா பொம்பளே கிடைப்பான்னு அலையுறானுங்க.

பிரசாத்: ஏய், கிழவா!

(கையை ஓங்கி அடிக்கப் போகிறான்.)

ஏழுமலை: ஏய், கையை ஓங்காதே. மூலைக் கொத்தாரத்தில அந்தக் காலத்திலேயே இட்டேரி முத்துவை ஏழு வாட்டி பொரட்டிப் பொரட்டி எடுத்தவன் நான்.

தீபா: இட்டேரி முத்துவா, யாரது?

ஏழு: தெரியாதா, உனக்கு? பெரிய வஸ்தாது: கனகசுந்தரம் பரம்பரை. என்னே விட்டா ஆளே இல்லேன்னு மெட்ராசையே விலே கூவிக்கினு இருந்தான். விட்டேன் ஒரு நாள் சவால். மூலைக்கொத்தாரம் கறிக்கடை மைதானத்திலே ஜனமா ஜனம். பொரட்டிப் பொரட்டி அடிச்சேன். அவன் வாய்க்குள்ளே ஒண்ணரைப் படி மண்ணு.

ரங்க: அடடா! அது என்ன கண்கொள்ளாக் காட்சி!

ஏழுமலை: அந்த வேடிக்கை பார்க்க வந்தவதானே இவ. நான் மாலை இட்டா இட்டேரி முத்துவை ஜெயிச்சவருக்குத்தான் மாலையிடுவேன்னு கண்டிஷனா சொல்லிட்டாளே!

பிரசாத்: அதிருக்கட்டும், எங்கே வந்தீங்க நீங்க?

ஏழுமலை: ஒண்ணுமில்லே ராசா — நம்ப வீட்டுல சிவராமன்னு ஒரு ஆளு குடி இருக்கிறாரு. அவருக்கு ஒரு தம்பி நித்யானந்தம்னு. அதுக்கு இந்தப் பொண்ணைக் கட்டிக் கொடுக்கலாம்னு எண்ணம். அடுத்த வாரம் நிச்சயதார்த்தம்.

ரங்க: சம்பந்தப்பட்டவங்களுக்கு அழைப்பு கொடுத்துட்டு வரச் சொல்லி அந்தச் சமையல் சாமி அனுப்பிச்சாரு. வந்தோம்.

பிரசாத்: ஓஹோ! தீபா, இது உன் வேலையா! அந்த அளவுக்குத் துணிஞ்சிட்டியா?

ரங்க: இதிலே என்னப்பா துணிச்சலு? மனசுக்குப் புடிச்சதுன்னு பொட்டுன்னு முடிக்க வேண்டியதுதானே? இவரைக் கோதாவிலே பார்த்தேன். எனக்குப் பிடிச்சிருச்சு. குழாயடியிலே தண்ணி பிடிக்கக் கிட்டிருந்தேன். இவர் என்னைப் பார்த்தாரு. இவருக்கு என்னைப் பிடிச்சிடுச்சி. பெரியவங்களைக் கேட்டுக் கல்யாணத்தை முடிச்சுட்டோம். அவசியம் வந்திருங்கப்பா.

பிரசாத்: வரோம், வரோம்.... நீங்க ரெண்டு பேரும் போகலாம்.

ஏழு: பெரியவரு எங்கே? அவரையும் கண்டு ஒருவார்த்தைசொல்லிட்டுப்போயிடறேன்.

பிரசாத்: அவரு உங்களை யெல்லாம் பார்க்க மாட்டாரு.

ஏழு: ஏன், கண்ணு வலியா? அடப்பாவமே!

ரங்க: செழுக் கோடியை அரைச்சு ரப்பை யில தடவச் சொல்லுப்பா. கண்ணு வலி சரியாயிடும்.

பிரசாத்: ஏய், கிழட்டு எருமைகளா! போகப் போறீங்களா, இல்லையா?

ஏழு: எலே, என்னடா சொன்னே! நீங்க தாண்டா மகிஷாசுரனுங்க. உங்களை வதம் பண்ண அம்பிகை அங்கே தலத்திலே இருக்கா. சில்லறைப் பசங்களா! எங் களைப் பார்த்தா எருமைன்னு சொல்றே?

ரங்க: என்னப்பா! அவரு எருமைன்னு சொன்னு உனக்கு ஏன் இவ்வளவு கோபம் வருது? எருமை தர்மராஜனுக்கு வாகனம். நம்மேல் தர்மம் ஏறி வருதுன்னு தானப்பா சொல்றுன்.

ஏழு: ஏய் இளவி! நீ ரொம்ப நல்லாச் சமாளிக்கிறே.

(இளமுருகு வருகிறுன்.)

இளமுருகு: சார்!

ஏழு: இருப்பா நில்லு! உன்னை நான் எங் கேயோ பார்த்திருக்கேனே...

ரங்க: என்னப்பா மறந்துட்டியா? அது தாம்ப்பா அங்க தலை விநாயகனைப் பார்க் கப் போய் அவர் தம்பி முருகனைப் பார்த் தியே....

ஏழு: ஆஹா! எனக்கு வழிகாட்டிய பழனி ஆண்டவனுச்சே...

பிரசாத்: என்னடா இதெல்லாம்...?

இள: தெரியலே சார். இவங்க யாருன்னு எனக் குத் தெரியாது சார்.

ஏழு: என்னப்பா, மறந்துட்டியே. சீதை இட்டே விருந்து மோதிரத்தை வாங்கி இட்டு வந்த ஆஞ்சநேயர் தானேப்பா நீ?

இள: சார், பைத்தியம் பிடிச்ச மாதிரி ஏதோ உளர்றுங்க சார்....

ஏழு: நான் கண்டுக்க மாட்டேம்பா. அந்த மோதிரம் அடுத்தவாட்டி இருப்பதி உண் டியலுக்குப் போயிடும். கவலைப்படாதே.

ரங்க: அப்ப நாங்க வரோங்க.

ஏழு: நாங்க வரோம்மா!

திபா: இரும்மா, நானும் வரேன்.

(மூவரும் போகிறுர்கள்.)

பிரசாத் (இளமுருகுவைப் பார்த்து): எங்கே வந்தே?

இள: உங்கப்பாவைப் பார்க்க அந்தச் சமை யல்கார சர்மா வந்திருக்காருங்க.

பிரசாத்: சபாஷ்! நீலகண்டன், காளமேகம்! எந்த ஸ்விட்சைத் தட்டிஞல் எந்த விளக்கு அணையும்னு அப்பாவுக்குத் தெரியும்.... கொடுக்க வேண்டியதைக் கொடுத்து அமுக்க வேண்டியதை அமுக்கிடுவார். அவர் அறிவுக்கு நம் அறிவு உறை போடக் காணுது. அப்பா! (தொடரும்)

---

## ஸ்கோரு கேட்கிறுர்!

'' ஸ்கோரு '' கேட்கிறுர் - கிரிக்கெட்
'' ஸ்கோரு '' கேட்கிறுர்
பேரு பெற்ற ''டெஸ்ட் மாட்சை''
பார்த்திடாத பிரியரெல்லாம்! -ஸ்கோரு

சரியாக க்யூவில் நின்று
சடுதியாக உள்ளே சென்று
காரில் பஸ்ஸில் ஏறிவந்து
இரவுண்டு தவம் செய்யாதவர்! -ஸ்கோரு

ஆட்டம் பார்க்க ஓட்டம் ஓடி
அங்கே டிக்கெட் கிடைக்காதவர்
கேட்டிலேயே நின்று ஏங்கி
நோட்டம் பார்த்து வருபவரை! -ஸ்கோரு

ரேடியோவைத் திருப்பி விட்டு
நாலு புறமும் சூழ்ந்துகிட்டு
ஓடிய''ரன்'' எத்தனை என்று
உரைத்ததுமே கோஷ மிட்டு! -ஸ்கோரு

வாசலிலே நிற்கும் போதும்
வழிநடந்து செல்லும் போதும்
ஆசையுள்ள ரசிக ரெல்லாம்
அறிந்தவரைப் பார்க்கும் போதும் -ஸ்கோரு

அலுவலகத்தின் மேஜைக் கடியில்
அவரவர்கள் கையில், பையில்
துளியும் காக விளக்காமல்
''டிரான்ஸிஸ்டர்'' உதவியினுல்! -ஸ்கோரு

''டி.வி.'' முன்னுல் அமர்ந்து கொண்டு
தேனீர், காப்பி அருந்திக் கொண்டு
'ஆவி' போகக் கத்திக் கொண்டு
ஆட்டம் பார்க்க முடியாதவர்! -ஸ்கோரு

— கோ. கந்தசாமி



**க**ண்ணாடியின் முன் நின்று முன்னும் பின்னும் பார்த்துக் கொண்டாள் சாரு. அப்போது, மூடிய அறைக் கதவைக் கைவிரலால் கரண்டும் சப்தம் கேட்டது.

'' பூனைக் குட்டி என்ன சொல்கிறது? கதவை ஏன் கரண்டுகிறது?'' என்று மலர மலர விழித்தபடி கேட்டாள் சாரு. வாய் திறந்து சிரித்த விஜய் கதவு திறந்ததும் ஓடி வந்து அவள் முதுகில் ஏறிக் கொள்ளப் போனான்.

'' இப்போது வேண்டாம். மாமி வெளியே போகணும். டிரெஸ் கலேஞ்சு போகும். வந்து விளையாடலாம். உனக்கு என்ன வேணும், சொல்லு.''

''பாப்கார்ன் — கோன் ஐஸ்கிரீம் — மில்க் சாக்லேட்...'' என்று வரிசையாக, யோசித்து யோசித்துப் பெயர்களைத் தொடுத்துக் கொண்டு போனான் விஜய்.

''ஆகட்டும்'' என்று சொல்லிவிட்டுச் சாவிக் கொத்தை எடுத்துக் கொண்டாள். அவனுக்குத் தெரியாமல் வீட்டைப் பூட்டுவதே மிகவும் சிரமம்தான்.

**அ**ன்று குழந்தையை வெளியே அழைத்துக் கொண்டு போன சாரு, அவனைத் திரும்ப அவன் வீட்டில் விடுவதற்காகப் போனாள். அவனுடைய தாய் ஹாலில் உட்கார்ந்திருந்தாள். அவள் உள்ளே நுழைவதைக் கண்டதும் ஒரு வாலிபன் உள்ளே எழுந்து செல்வதைக் கவனித்தாள்.

'' சங்கர் லீவில் வந்திருக்கிறான். பூனாவில் ஏதோ ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறான். பேசினால் ஆராய்ச்சிப் பேச்சு; இல்லா விட்டால் வெளியில்கூட வரமாட்டான். யாருடனும் பழக மாட்டான். அப்படி ஒரு சங்கோசம்'' என்று முணுமுணுத்தாள், விஜயின் தாயார் ஜெயம்.

சாரு போக எழுந்திருக்கும் வரையில் சங்கரின் முகம் தென்படவில்லை. ''வந்ததுதான் வந்

தாய். குழந்தை சாப்பிட உட்காரறதிருக்கிறான். கொஞ்சம் ஊட்டிவிட்டுப் போய் விடேன். இந்த வேளைக்கு நான் தப்பித்துக் கொள்கிறேன்'' என்றாள் ஜெயம்.

சாதத்தை அளை கட்டிக் கொண்டு, குளம் போல் ரசத்தை விட்டுக் கொண்டு, பொட்டலமாக எதிரே உட்கார்ந்திருந்தான் விஜய். அவள் அருகே வந்து உட்கார்ந்ததும், கைகளைச் செல்லமாக முறுக்கிக் கொண்டான். மெள்ளக் கதை சொல்லி ஊட்டிய போது அடுத்த அறையிலிருந்து யாரோ கவனிப்பதை உணர்ந்தாள் சாரு. அவள் கவனிக்கும்போது அந்தக் கண்கள் பார்வையிலிருந்து நழுவி விட்டன. இப்படி ஒரு சங்கோசமா?

ஒரு வாரம் ஆகி இருக்கும். சங்கரைப் பற்றித் தினம் ஒரு கதை சொல்லுவான் விஜய். ''மாமாவுக்குக் கார்விடத் தெரியாது. ஸ்கூட்டர்கூட விடத் தெரியாது. நான்தான் ஜோராக ஓட்டுவேன்'' என்று வாயைக் குவித்துச் சப்தம் செய்தபடி, கைகளைச் சுற்றி ஆட்டியபடி அறை முழுதும் ஓடுவான்.

''அம்மாவும் மாமாவும் இன்றைக்குப் போட்—கிளப்புக்குப் போகிறார்கள். நானும் போகிறேன். உன்னை வர்றியான்னு கேட்டார்கள்'' என்று ஓடி வந்து மூச்சிரைக்கச் சொன்னான் விஜய்.

'' யார் கேட்டா? மாமாவா?''

''ஊஹூம். மாமாவுக்கு அதெல்லாம் கேட்கத் தெரியாது. அம்மாதான் கேட்டாள். நீ வாயேன்'' என்று கழுத்தைக் கட்டிக் கொண்டு தொங்கினான் விஜய்.

''எனக்கு வேலை இருக்கு'' என்று கண்ணைச் சிமிட்டினாள் சாரு.



''நீ வர்றேன்னு சொன்னுத்தான்!'' என்று கழுந்தை விடாமல் கைகளைப் பூட்டாகப் பிணைத்துக் கொண்டு தொங்கினுன் குழந்தை. கடைசியில்' ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று. அவளுக்கும் அதில் கொஞ்சம் ஆவல்தான். எதிர்பார்ப்பில் உயர்ந்து நின்ற மனம். விந்தையான சுபாவத்தை வேடிக்கை பார்க்கும் ஆவல்.

சங்கரையும் அவளையும் அறிமுகம் செய்து வைத்துவிட்டுக் குழந்தையுடன் ஒதுங்கிக் கொண்டாள் ஜயம். கொஞ்ச நேரம் என்ன பேசுவது என்றே தெரியவில்லை. அப்புறம் தன் அலுவலகக் கதைகளையெல்லாம் சொல்ல ஆரம்பித்தான். வெகு சுவாரசியமாக அவளைக் கவனித்தான் சங்கர். ஆனுல் பதிலுக்கு அவளிடமிருந்து ஒரு பேச்சுக்கூட இல்லை. ஓர் அமைதியான புன்முறுவல் மட்டும்தான்.

படகில் உட்கார்ந்துகொண்டு போனபோது விஜய் மகிழ்ச்சியில் துள்ளிக் கொண்டிருந்தான். எதையோ நினைத்துக் கொண்டவளைப் போல ஜயம், ''சங்கர்! உனக்கு நீச்சல் தெரியுமோ?'' என்று கேட்டாள். அவன் கீழுதடு பிதுங்கிற்று. அதைச் சாருவின் முன்னிலையில் சொல்லிக் கொள்ள வெட்கம். ''எனக்குத் தெரியும். கல்லூரியில் கற்றுக் கொண்டேன்!'' என்று சாரு சொன்னபோது அந்த வெட்கம் இன்னும் அதிகமாயிற்று.

'' என்னையும் முதுகில் வைத்துக் கொண்டு நீந்தேன்'' என்று முதுகில் ஏறிக் கொண்டான் விஜய். அவள் சமாதானமாகச் சரி என்று சொன்னதும், அவள் மடியில் செல்லமாகப் புரண்டபடி சங்கரைப் பார்த்து விரலை ஆட்டினுன். சங்கருக்குத் தன் உணர்ச்சிகளின் சங்கடத்தில் சிரிப்பு வரவில்லை.

அதன் பிறகு சாரு அந்த வீட்டுக்குப் போனுல், சங்கர் தயங்கிக் கொண்டு எழுந்து உள்ளே போய் விடுவதில்லை.

''தாஜ் ஹோட்டலில் வீட்டு அலங்காரப் பொருட்களைப் பற்றி ஒரு கண் காட்சி. இன்றைக்குப் போகலாமா?'' என்று பேப்பரைப் பார்த்தபடி கேட்டான் சங்கர்.

'' அதிசயந்தான். சங்கரே கூப்பிடுகிறுன். இன்று மழைதான்!'' சிரித்தாள் ஜயம்.

''மழைதான் தினமும் பெய்கிறதே? அவர் கூப்பிடுவதுதான் அதிசயம்!'' என்று சாருவும் சேர்ந்து கிண்டலாகச் சிரித்தாள்.

''நானும் வருவேன். எனக்கு ஒரு நல்ல ஸ்கூட்டர் வாங்கித்தரணும்'' என்றுன் விஜய்.

தலைவலி அதிகமாக இருக்கிறது என்று சொல்லிவிட்டு ஜயம் கடைசி நேரத்தில் பின் தங்கிவிட்டாள். தயாராகிக் கிளம்பிய பிறகு அவர்கள் பின்தங்க முடியவில்லை. விஜய் அழுது ரகளை செய்வான் போல் இருந்தது. குழந்தையைச் சாக்கிட்டுக் கொண்டு கிளம்பினுலும், அவர்கள் மனத்திலேயே ஒருவரையொருவர் துணை தேடும் ஆவலை மறைக்க முடியவில்லை. டாக்ஸியில் உட்கார்ந்து சென்றபோது குழந்தையை நடுவில் வைத்துக் கொண்டார்கள். ஆளுக்கொரு கையாக இருவர் மடியிலும் கைகளைச் சொகுசாகப் போட்டுக் கொண்டான் விஜய்.

கண்காட்சியைச் சுற்றிப் பார்ப்பதற்குள் குழந்தை தூங்கி விட்டான். ஆளுக்குக் கொஞ்சமாக மாறி மாறித் தூக்கிக் கொண்டார்கள். ஏகாந்தம் கிடைத்த அந்த நேரத்தில் அவளோடு சுவாரசியமாய் ஏதாவது பேச வேண்டும் என்று சங்கருக்கு ஆர்வம். ஆனுல் அவன் சங்கோசம் அவனேடு ஒட்டிக்

எஸ். லக்ஷ்மி சுப்பிரமணியம்



## இவரது முதல் டெஸ்ட்!

இந்திய கிரிக்கட் கேப்டன் பேடி தாமே முதல் டெஸ்ட் மாட்ச் விளையாடிய வரை அவர் ஒரு டெஸ்ட் மாட்ச் கூட பார்த்தது கிடையாதாம். அதாவது அவர் பார்த்த முதல் டெஸ்ட் அவர் விளையாடிய டெஸ்ட். -பாபு

-இந்துஸ்தான் டைம்ஸ்



கொண்டு அவனைப் பேச விடவில்லை. அதைக் கண்டு அவளுக்கே கொஞ்சம் பரிதாபமாக இருந்தது.

திடீரெனக் கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "கண்காட்சியில் கவனித்தாயா? உன்னைப் போலவே ஒரு பெண், 'டைட்ஸ்' உடையுடன் வந்திருந்தாளே? அவள் உருவத்துக்குப் பொருத்தமாக இருந்தது. உனக்கும்கூட..." என்றான் சங்கர்.

சாரு உடம்பைச் சிலிர்த்து ஒரு தினுசாக ஒடுக்கிக் கொண்டாள். "எனக்குப் பிடிக்காது அதெல்லாம். புடவை கட்டிக் கொண்டால்கூடப் புக்கப் பதிய அடக்கமாகக் கட்டிக் கொண்டால்தான் எனக்குப் பிடிக்கும்."

"நீ அந்த மாதிரி உடை அணிந்து கொண்டால் ஒரு பள்ளிக்கூடத்துப் பெண்ணைப் போல் இருப்பாய்" என்று சிரித்துக் கொண்டான் சேகர். பிறகு ஏதோ நினைவுக்கு வந்தவனைப் போல, "நீ கல்லூரியில் நீச்சல் கற்றுக் கொண்டேன் என்றாயே!" என்றான்.

"அந்த உடைக்கு ஒரு காரணம் இருந்தது. அதிலும் நான் கல்லூரிக்கு வெளியில் போட்டிகள் எதிலும் கலந்து கொண்டது இல்லை. என் சுபாவம் அப்படி."

"நான்கூட அதிகமாக வெளியே போகும் வழக்கம் இல்லை. இப்போது உனக்காக அடிக்கடி வரவில்லையா? எனக்காக நீ ஒரு நாள் அப்படி 'டிரஸ்' பண்ணிக்கொள்ளேன்!"

"உங்களுக்காகவா? நானா? எதற்கு?" என்று ஒரு மிரண்ட புன்னகையுடன் கேட்டாள் சாரு. சங்கரால் பதில் சொல்ல முடியவில்லை. உணர்ச்சிகளை வெளியிட முடியாமல் தவித்துப் போனான். அப்புறம் வீடு வந்து சேரும் வரையில் இருவரும் சரியாகப் பேசிக் கொள்ளவில்லை.

**வா**சலில் விஜய் வந்து நின்று கொண்டிருந்தான். குளித்துவிட்டுக் கூந்தலை உலர்த்திக் கொண்டிருந்தாள் சாரு. ஜன்னல் வழியாக அவனைப் பார்த்ததும் அவன் முகம் மலர்ந்தது. விரலைக் கொக்கி மாதிரி வளைத்து அவனை உள்ளே அழைத்தாள் சாரு.

உள்ளே வந்ததும் கையை அகல விரித்து, "என்னைத் தூக்கிக்கோ!" என்றான் விஜய். அவள் எடுத்துக் கொண்டதும் அவள் முகத்தை எட்டி வாயில் ஒரு சாக்லேட்டைப் போட்டான்.

"எதற்கு?" என்று புன்னகை விரியக் கேட்டாள் சாரு.

"இன்றைக்கு எனக்குப் பிறந்த நாள். சாயங்காலம், பார்ட்டி. ஊரிலேயிருந்து அப்பா வந்திருக்கா. உன்னைக் கட்டாயம் வரச் சொன்னா."

"பூனைக் குட்டிக்கு பர்த் டே!"

"ஐஸ் கிரீம்!" அவளைப் பதிலுக்குப் பரிகாசம் செய்துவிட்டு விஜய் ஓடி விட்டான்.

குழந்தைக்குப் பரிசாக, அவன் வெகு நாட்களாகக் கேட்டுக் கொண்டிருந்த பச்சைக் கார் பொம்மை ஒன்றை வாங்கிக் கொண்டு போனான். சில்க் ஜிப்பாவும், சராயும் போட்டுக் கொண்டு, ஹாலில் மூலைக்கு மூலை ஓடி வளைய வந்து கொண்டிருந்தான் விஜய். எல்லோருமாக உட்கார்ந்து பேச ஆரம்பித்ததும் பச்சைக் காரை எடுத்துக் கொண்டு ஓடி விட்டான்.

சிரித்துப் பேசிக் கொண்டிருந்தவர்களிடையே, தட்டில் சிற்றுண்டியை ஒவ்வொருவருக்கும் கொடுத்துக் கொண்டு வந்தாள் ஜெயம். அப்போதுதான் குழந்தையைக் காணவில்லை என்பது புரிந்தது. அப்போது சமையல் அறைக்குப் பக்கத்திலிருந்து சிறு அழுகையும், கதவைச் சுரண்டும் சத்தமும் கேட்டது. சட்டென்று எழுந்து நின்றாள் சாரு. "குழந்தை ஏதோ ஓர் அறைக்குள் இருக்கிறான். கதவைத் திறக்கச் சொல்கிறான். தேடிப் பாருங்கள்!"

மூலைக்கு ஒருவராக ஓடினார்கள். குளியலறைக் கதவு சாத்தியிருந்தது. அதன் உட்புறமிருந்து விஜய் கதவைத் திறக்க முடியாமல் அழுவதும் புரிந்தது. ஜயத்துக்குக் கைகால் ஓடவில்லை. கணவரின் முகத்தைத் திகிலுடன் திரும்பிப் பார்த்தாள்.

"குழந்தை உள்ளே தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு விட்டான். திறக்கத் தெரியவில்லை. சீக்கிரமாக ஏதாவது செய்ய வேண்டும். குழந்தை பயந்து கொண்டு விடுவான்" என்று பதைபதைப்போடு சொன்னாள் சாரு.

"தாழ்ப்பாள் உயரத்தில் இருக்கிறது. அந்தக் கொக்கி தானே விழுந்து மூடிக் கொண்டிருக்கிறது. நாம் சொல்லிக் கொடுத்தாலும் குழந்தையால் எட்டித் திறக்க முடியாது" என்றார் ஜயத்தின் கணவர் விகவம்.

"ஜன்னல் இருந்தால் அதன் வழியாக ஒரு நீளக் கழியை விட்டுப் பார்க்கலாமே?" என்றாள் சாரு.

"ஜன்னல் இல்லை. வலைக் கம்பி போட்ட சாளரம்தான் உயரத்தில் இருக்கிறது. அதன் வழியாகக் கழியை நுழைக்க முடியாது.. மேலே திறந்த மாடியிலிருந்து குளியலறைக்கு ஒரு புகைக் கூண்டு வருகிறது. அதன் வழியாக வேண்டுமானால் இறங்கலாம்" என்றான் அதுவரை பேசாமல் இருந்த சங்கர்.

"அதுவும் ரொம்பச் சிரமம். வெகு நாட்களாக அதை யாரும் உபயோகிக்கவேயில்லை. தவிர அது ரொம்ப அகலக் குறுகலானது. நாமெல்லாம் உள்ளே இறங்குவது கூடச் சிரமம்!" என்று முணுமுணுத்தார் விகவம்.

"இருங்கள். நான் இறங்க முடியும் என்று நினைக்கிறேன். இங்கே இருப்பவர்களுக்குள் நான்தான் உயரம், பருமன் எல்லாவற்றிலும் குறைச்சல்" என்றாள் சாரு. ஒருமுறை தன்னைக் குனிந்து பார்த்துக் கொண்டாள்.

''நீயா? எப்படி? அதில் படிக்கட்டுக்கள் இல்லை. பத்து அடிவரையில் கீழே இறங்கணும். இந்தப் புடவைக் கட்டுடன் நீ எப்படி—'' என்று தயங்கினாள் ஜயம். பிறகு ''உனக்குச் சம்மதமானால்—'' என்று சொல்லிப் பக்கத்து அறைக்கு அழைத்துப்போனாள்.

அவள் தந்த அட்டைப் பெட்டியைத் திகைப்புடன் பார்த்தபடி நின்றாள் சாரு. ''ஏது இது? யார் வாங்கினது?'' என்று ஒரு தினுசான மருட்சியுடன் கேட்டாள்.

''சங்கர்தான். உனக்காகத்தான் வாங்கி இருக்க வேண்டும். கொடுக்கத் தைரியம் இல்லை. இப்போது இந்தச் சமயத்துக்கு இது உதவ முடியும்.''

ஒரு கணம் தயங்கினாள் சாரு. குழந்தை உரத்த குரலில் அழும் சத்தம் கேட்டது. கதவின் அறையைச் சாத்திக் கொண்டு மளமளவென்று உடையை மாற்றிக் கொண்டாள். வெளியே வந்ததும் மாடிப் படிகளில் ஏறி, திறந்த மாடியிலுள்ள புகைக் கூண்டை நோக்கி ஓடினாள்.

அங்கே அதன் மேல் வாயில் இருந்த செங்கற்களைப் பெயர்த்து எடுத்துக் கொண்டிருந்த சங்கர், ''விஜய் கண்ணு! பயப்படாதே! இப்போ உங்கிட்ட சாரு ஆன்டி வந்துடுவா'' என்று தைரியம் கொடுத்துக் கொண்டிருந்தான்.

புகைக் கூண்டின் வாய் முழுதும் திறக்கப் பட்டதும் உள்ளே குனிந்து பார்த்தாள் சாரு. பத்தடிக்கு ஒரே இருட்டாக இருந்தது. வெகு நாட்களாகச் சேர்ந்த கரியும் ஒட்டடையும் வெளிச்சத்தை மறைத்துக் கொண்டிருந்தன. இறங்குவதற்குப் படிகளோ, உதைகாலுக்குப் பள்ளங்களோ இல்லை.

குழந்தையின் குரல் கிணற்றுக்குள்ளிருந்து கேட்பது போல் மேலே உயர்ந்து வந்தது. தன்னை மறந்து உள்ளே வேகமாக இறங்கப் போனாள் சாரு.

''என் கைகளை இறுகப் பிடித்துக்கொள்! நான் என் முழு உயரத்தையும் பயன்படுத்தி உன்னை எவ்வளவு கீழே இறக்கி விட முடியுமோ, அவ்வளவு தூரம் இறக்கி விடுகிறேன்'' என்றான் சங்கர். சிறிதும் தயக்கமின்றி அவன் கைகளைப் பற்றிய வண்ணம் உள்ளே இறங்கி விட்டாள் சாரு. முழங்கால் வரை மடிந்து நின்று அவளை மெதுவாக இறக்கினான் சங்கர்.

''ஜாக்கிரதை! பயப்படாதே சாரு!'' என்று டார்ச் விளக்கை உள்ளே காட்டினாள் ஜயம். மூச்சை இறுக்கிப் பிடித்துக் கொண்டு உட்புறம் உடல் உராய உள்ளே குதித்தாள் சாரு. ஒரு கணம் நிசப்தம். மறு கணம் விஜய் சாருவைக் கட்டிக் கொண்டு விசிக்கும் சப்தம் கேட்டது.

எல்லோருமாகக் கீழே ஓடினார்கள்.

மாடியிலிருந்து மூவருமாகக் கீழே ஓடி வந்து நின்றபோது, குளியலறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்திருந்தார்கள் சாருவும் விஜயும். கண்ணீர் காயாத கன்னங்கள் உப்ப, வாயைக் குவித்து ஊதியபடி பச்சைக் காரை ஓட்டிக் கொண்டிருந்தான் விஜய். பயத்தில் அமிழ்ந்திருந்த சுவடு கூட இல்லை.

தலையை நிமிர்த்தி விஜய் எல்லோரையும் பார்த்ததும், எழுந்து நின்று சிரித்தபடி, ''நான் ஒண்ணும் பூனைக் குட்டி இல்லை. 'ஆன்ட்டி'தான் பூனைக் குட்டி! கூரை மேலே இருந்து பூனைக் குட்டி மாதிரி கீழே குதிச்சாங்க!'' என்று கையைத் தட்டினான். சிரிப்பு மாறாத முகத்துடன் சாருவின்புறம் அவன் திரும்பியபோது, எல்லோருடைய பார்வையும் அவள்புறம் திரும்பிற்று. கரி படிந்த முகம் — அழகான வெள்ளை டைட்ஸ் உடுப்பு நிறையக் கரி...

அந்தத் திகில் உணர்ச்சியில் அதுவரையில் அவளைச் சரியாகக் கவனிக்கத் தோன்றாத சங்கர், 'டைட்ஸ்' உடையில் அவள் உருவத்தின் அழகை ரசித்தபடி லயித்துப்போனான். கூடவே அவள் முகத்திலிருந்து கால் வரை நிறைந்திருந்த கரியைப் பார்த்ததில், சிரிப்பும் பீறிட்டுக் கொண்டு வந்தது அவனுக்கு.

எல்லோரும் சிரிக்கவே அவள் தன்னைத் தானே குனிந்து பார்த்துக் கொண்டாள். வெட்கம் பிடுங்கித் தின்னவே உள்ளே ஓடினாள்.

கூச்சல் போட்டபடி பச்சைக் காரை விரட்டிக்கொண்டு விஜயும், அவனைத் தொடர்ந்து சங்கரும் உள்ளே போனார்கள். சந்தோஷமும் வெட்கமும் ஒரு சேர நின்ற சாருவின் உள்ளொளி தன் மேல் படரவே, ''இந்த உடையை வாங்கி வந்தபோது அதற்கு இப்படி ஓர் அவசியம் வரும் என்று நான் நினைக்கவே யில்லை, சாரு!'' என்றான் சங்கர்.

'ஆசை தீர்ந்ததா?' என்று கேட்கத் தீராத ஆசை எழுந்தாலும் அவளுக்கு வாய்தான் எழவில்லை.



ஒரு காலத்தில் கடல் கோளின் காரணமாக மதுரை நகர் முழுதும் அழிக்கப்பட்டது. சோமசுந்தரப் பெருமானுடைய கோயில் மட்டும் பாதிக்கப்படவில்லை. வெள்ளம் வடிந்தபிறகு நகரத்தை மறுபடியும் அமைக்கப் பாண்டியன் திட்டமிட்டான். வெள்ளத்தால் எல்லைகள் மறைந்து போயிருந்தன.

சோமசுந்தரர் பாண்டியனுடைய கவலையைத் தீர்த்து வைத்தார். சித்தர் உருவில் வந்த அவர், கோயில் விமானத்தின் வடபுறம் உட்கார்ந்து கங்கணமாக அணிந்திருந்த பாம்பை ஏவினார், எல்லையை நிர்ணயிக்க.

நீண்டு வளர்ந்த பாம்பு நகரையே வளைத்து, வாலை வாயில் வைத்து எல்லையை நிர்ணயித்தது.

இதனால்தான் மதுரையை ஆலவாய் நகர் என்கிறார்கள்.

## 4

**ரா**பர்ட் ஃபிட்ஜெரால்ட் கான்வே ஒரு பித்துக்குளி. அமெரிக்காவில் டெக்ஸாஸில் அவனுடைய தகப்பனாருக்கு ஏழெட்டு எண்ணெய் ஊற்றுக்கள் இருக்கின்றன. டாலராகக் கொழிக்கும் கோதுமை ஆயிரம் ஏக்கர்களில் பயிராகிறது. இவற்றைத் தவிர' ஓர் இயந்திரம் தயாரிக்கும் தொழிற்சாலை, ஒரு கோழிப் பண்ணை என்று எவ்வளவோ இருக்கின்றன. கான்வேயின் தகப்பனார் தம் நான்கு பிள்ளைகளில் இருவரை வியட்நாம் போரில் இழந்தவர். மூன்றாவது பிள்ளை தகப்பனாருடைய தொழிற்சாலையைக் 'கவனித்து வருகிறான்.

கடைக்குட்டியை ஹார்வர்ட் சர்வகலாசாலைக்கு அனுப்பினார். பையன் பிரமாதமாகப் படித்து, தேர்வில் வெற்றி பெற்றான். 'ஒரு வருடம் உலகத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வா' என்று பிள்ளையிடம் பாங்க் பாஸ் புத்தகத்தைக் கொடுத்தார் தகப்பனார்.

அவ்வளவுதான்; தென் அமெரிக்காவில் முதலில் கான்வே கால் வைத்தான். பரந்த தேசங்களில் அங்கங்கே கொத்துக் கொத்தாக வாழ்ந்த மனிதர்களும் சரி, சின்னச் சின்ன நகரங்களும் சரி, அவனை ஈர்க்கவில்லை. ஐரோப்பாவுக்குப் பறந்தான். இங்கிலீஷ்காரன் தன் காரியத்திலேயே மூழ்கிக் கிடந்தான். பாரிஸில் இரவுதான் விழித்துக் கொண்டிருந்தது. இத்தாலியில் பழைய சின்னங்களைக் காட்டிப் பணத்தை மட்டும் பறித்தார்கள். ஸ்பெயினின் திராட்சைத் தோட்டங்கள் மது வெறியின் உற்பத்தி ஸ்தானங்களாகப் பட்டன. கிழக்கு ஜெர்மனியையும் ரஷ்யாவையும் அவன் பார்க்கவில்லை. அதற்கு அந்தத் தேசங்கள் கொடுத்து வைக்கவில்லை.

அவன் அலுப்புடன் நைல் நதிக் கரையில் ஒரு நாள் நடந்து கொண்டிருக்கையில்தான் 'இந்தியா என்று ஒரு தேசம் இருக்கிறது' என்று ஒரு நண்பர் ஞாபகப்படுத்தினார். அமெரிக்காவில் சின்னஞ் சிறு வயதில் சரித்திரப் பாடம் படிக்கும் போது ஆசிரியை இந்தியாவைப் பற்றிக் குறிப்பிட்டது அவனுடைய



# மதுர நாயகி

பி.வி.ஆர்



நினைவுக்கு வந்தது. 'பாம்புகளும் பக்கிரிகளும் ஏராளம். மனிதர்கள் தெருவில் போகிற மாடுகளையும் கிளைகளில் தலைகீழாகத் தொங்கும் குரங்குகளையும் வழிபடுவார்கள்...' என்றெல்லாம் அந்த ஆசிரியை போதித்திருந்தாள். இந்தப் போதனைதான் அவன் மனத்தில் அழுத்தமாகப் பதிந்து இந்தியாவைப் பற்றி ஒரு கருத்தை ஏற்படுத்தியிருந்தது. ஆனால் ஹார்வர்டு சர்வகலாசாலையில் படித்துக் கொண்டிருக்கும் போது எண்ணங்கள் மாறலாயின.

மியூஸியத்தில் பார்த்த ஒரு பஞ்ச லோக நடராஜ சிலை வியப்பை ஊட்டியது.

நூலகத்தில் படித்த சுவாமி விவேகானந்தரின் பேச்சுக்கள் சிந்தனையைத் தூண்டின.

ராதாகிருஷ்ணனின் பகவத்கீதை அவனை மெய்மறக்கச் செய்தது.

தகப்பனாரின் எண்ணெய் ஊற்றுக்களிலிருந்து வரும் லட்சக் கணக்கான பேரல் எண்ணெயை விட அதிகமான எண்ணங்கள் பாரத ஊற்றுக்களிலிருந்து வருகின்றன என்பதை உணர்ந்து, அவன் கெய்ரோவிலிருந்து பம்பாய்க்கு வந்தான். அப்போது வயது இருபத்தி நாலு.

இன்று மூன்று வருடங்களில் சமஸ்கிருதத்தில் தேர்ச்சி பெற்று, இந்தி, வங்காளி, தமிழ் பேசக் கற்றுக் கொண்டு உலகம் முழுதும் இந்து மதம் பரவினால்தான் மானிடவர்க்கத்துக்கு உய்வு உண்டு என்று கட்டுரைகள் எழுதி அமெரிக்காவுக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறான்.

காசி, ஹரித்வார், ரிஷிகேசம், பத்ரிநாத் எல்லாம் பார்த்த பிறகு, நர்மதா கோதாவரி தீரங்களில் மூழ்கிய பிறகு சென்ற வருடம் ஆலவாய் நகருக்கு வந்த கான்வேக்கு மதுரையை விட்டுச் செல்ல மனம் வரவில்லை.

இதற்குக் காரணம் அழகான பெரிய கோவிலும், தேனீக்கள் போல் எப்போதும் சுறுசுறுப்பாக இருக்கும் நகரமும் மட்டுமல்ல. அவனுடைய கண்களைக் கவ்விப் பிடித்து, உள்ளத்தில் உறைந்துவிட்ட லாவண்யாவும் தான். திரும்பி அமெரிக்காவுக்குப் போனால் அவனுடன் போவது, இல்லாவிட்டால் இந்த மதுரையிலேயே நாட்களை ஓட்டி விடுவது என்றிருந்தான்.

இப்போது அவன் பாண்டியன் ஹோட்டலில் நான்கு மணிக்கு வருவதாகச் சொல்லியிருந்த லாவண்யாவுக்காகக் காத்திருந்தான். அவள் முந்தின நாள் கொடுத்திருந்த திருக்குறள் புத்தகம் கையில் இருந்தது.





கேரளப் பொதுப் பணித் துறையில் நடந்ததாகச் சந்தேகிக்கப்பட்ட சில ஊழல்களை விசாரிக்க ஒரு விசாரணைக் கமிட்டி அமைக்கப்பட்டது. மூன்று வருடங்களாக அந்தக் கமிட்டி, விசாரணை, துப்பறிதல் எல்லாம் செய்தது. இப்போது அந்தக் கமிட்டி மேலேயே சந்தேகம் கிளம்பி விட்டது. அதைப் பற்றி விசாரிக்க இன்னொரு கமிட்டி நியமிக்கப் பட்டுள்ளது! - டைம்ஸ் ஆப் இந்தியா - சாமி

---

நான்கு அடித்தது.

அதே சமயம் மின்சார மணியும் அடித்தது.

அவனுக்கே இயல்பான நிதானத்துடன், 'கமிங்...' என்று கூறிக் கொண்டே கதவை நோக்கி நடந்தான்.

லாவண்யா களைத்துப் போன முகத்துடன் காணப்பட்டாள்.

''யூ டோண்ட் லுக் ஆல்ரைட்...'' என்ற கான்வே அவள் உள்ளே வருவதற்காக வழி விட்டான்.

''யெஸ், ஐ ஆம் டயர்ட்... வெரி டயர்ட்'' என்றாள் லாவண்யா.

''என்ன சாப்பிடுகிறாய்?''

''ப்ளெயின் காப்பி...''

டெலிஃபோன் மூலமாகக் காப்பிக்கு ஆர்டர் பண்ணிய கான்வே, ''இன்னிக்கு எங்கேஜ்மெண்ட் ஒண்ணும் இல்லியா?'' என்று கேட்டான்.

''இருந்திருந்தால் நான் எப்படி உங்களைப் பார்க்க வரமுடியும்?''

''அப்போ இன்னிக்கு இருபது ரூபாய் வரும்படி இல்லே!'' என்று சொல்லிச் சிரித்தான் கான்வே.

அவளுக்கு எரிச்சல் வந்தது.

''ஏன் சந்தோஷமா இருக்கா எனக்கு இன்னிக்கு வரும்படி இல்லாதது!''

''சந்தேகம் என்ன? எனக்கு ரொம்ப மகிழ்ச்சியா இருக்கு. உனக்கு வரும்படி வந்தா அன்னிக்கு உன்னை நான் பார்க்க முடியாதே?''

லாவண்யா பதில் பேசவில்லை. காப்பியைக் குடித்தால்தான் உடலில் ஒரு தெம்பு வரும் என்று அவள் காத்திருந்தாள்.

''லாவண்யா, அம்மாவிடமிருந்து கடிதாக வந்திருக்கிறது...''

''உங்க அம்மா, அப்பா, அண்ணன் எல்லோரும் சௌக்கியமா? உங்க அண்ணனுடைய குழந்தைக்கு இப்போ மூணு மாசம் ஆறதே. முகம் பார்த்துச் சிரிக்கிறதா?''

''எல்லோரும் ஓகே... நீ எப்படி இருக்கேன்னு அம்மா கேட்டிருக்கிறாள்...''

''அப்படியா?''

''யெஸ்... உன்னைப் பார்க்கணும்னு ஆசையாக இருக்காம்...''

''ஒரு பிளேனில் ஏறி இங்கே குதிக்க வேண்டியதுதானே?''

''புதுசா ஒரு பால் பண்ணை ஆரம்பித்திருக்கிறார்களாம்... அதிலே அம்மா பிஸியா இருக்கா...''

''எதுக்கு மேலே மேலே பணம்?''

''அமெரிக்காவின் சக்தியே பணத்தில்தான் இருக்கிறது.''

''அதன் பலவீனமும் பணத்தில்தான்'' என்றாள் லாவண்யா.

''மேபி...'' என்ற கான்வே, ''நீ அமெரிக்காவுக்குச் செல்ல உன் வீட்டிலே அனுமதிப்பார்களா?'' என்று திடீரென்று பேச்சை மாற்றிக் கேட்டான்.

''நான் எது செய்தாலுமே என் அம்மா கத்துவா... அப்பா மௌனமாகவே தம் ஆட்சேபணையைக் காட்டுவார்... ஆனால் நான் லட்சியம் செய்யறதில்லே. ஒரு வயது வந்து விட்டால், பிறத்தியாருடைய யோசனை தேவையில்லாத விஷயம்.''

''நோ... நான் அக்ரீ பண்ண மாட்டேன்.. மூணு வருஷமா நான் இந்தியாவிலேயே இருக்கேன்... என் சந்தோஷம் இங்கேதான் இருக்கு போலிருக்குன்னு அம்மா அப்பா பேசாம இருக்காங்க... அவர்கள் என்னைத் திரும்பி வர எழுதலேயில்லே...''

''எழுதிட்டாப் போயிடுவீங்களாக்கும்.''

''நோ... என் மனசைத் திறந்து காட்டுவேன். அவங்க புரிஞ்சுப்பாங்க...''

''புரிஞ்சுக்கலேன்னு?''

''அவங்களைத் திருப்திப்படுத்தக் கிளம்பி விடுவேன்... அப்புறம் மெதுவாகத் திரும்பி வருவேன்.''

காப்பி வந்தது.

லாவண்யா ஒரு பரபரப்புடன் குடித்தாள்.

''நீ அமெரிக்காவுக்கு வர்றதானு உடனேயே புறப்படலாம்.''

''மிஸ்டர் கான்வே, நீங்க உங்களை மறந்து பேசறீங்க... அது உங்க குணமாயிடுத்து!''

''என்ன?''

''நான் ஒரு ஹிண்டு பிராமின் கேர்ள்.''

''ஸோ வாட்? பிராமின் கேர்ள்னு அமெரிக்காவுக்குப் போகக் கூடாதா...? எத்தனை பேர் வந்திருக்கா?''

''வந்திருக்கா... ஆனா எதுக்கு? மேற்படிப்பு படிக்க.''

''அப்புறம் அங்கேயே கல்யாணம் பண்ணிக்கொண்டு தங்கிவிடலியா?''

''எனக்குப் புரிகிறது மிஸ்டர் கான்வே... ஆனா... ஆனா...''

''இதோ பார், லாவண்யா, நான் இந்தியாவுக்கு வந்தப்புறம்தான் ஒரு பெரிய உண்மையைத் தெரிஞ்சுண்டேன்... எத்தனையோ ரிலிஜன் இருக்கலாம்... ஆயிரக் கணக்கான ஜாதிகள் இருக்கலாம்... ஆனால் இதெல்லாம் வெளி வாழ்க்கையைத்தான் காட்டறது... இந்து மதம் ஒண்ணுதான் மனுஷனுடைய உள் வாழ்க்கையை — மனத்தின் வாழ்க்கையைப் பற்றி வேதங்கள் மூலமாகப் போதிக்கிறது... ஆத்ம சொரூபம் என்கிறதே...''

''ப்ளீஸ்!'' என்று இடைமறித்த லாவண்யா, ''இதையெல்லாம் நீங்க உங்க கட்டுரையிலே எழுதி அனுப்புங்க'' என்றாள்.

கான்வே சிரித்தான்.

''மனித வர்க்கத்தில் மனிதர்கள்தான் முக்கியம். சாதி, மதம், நடை, உடை இதெல்லாம் முக்கியமில்லே.''

''ஆனா எங்க தேசத்திலே நடைமுறைக்கு ஒத்து வராதது. சாதாரண வாழ்க்கைக்கு

அப்பாற்பட்டது எல்லாமே விபரீதமாகப் படும்... உதாரணமா, இப்போ உங்களுக்கு ஒண்ணு சொல்றேன். இது உங்க அறை. இதிலே நான் உட்கார்ந்திருக்கேன்... இப்ப காப்பி கொண்டு வந்தானே வெயிட்டர், அவன் என்னைப் பற்றி என்ன நினைக்கிறான் தெரியுமா....!''

''யூ ஆர் எ ஃபூல்... நீ அவனை ஒரு பொருட்டா மதிக்கிறே...! பிறத்தியாருடைய பேச்சுக்கு ஒரு மதிப்புக் கொடுக்கிறே...! உன்னுடைய மன உறுதியிலேயே உனக்கே இன்னும் நம்பிக்கை விழலே! அது என்னிக்கு விழறதோ, அன்னிக்குத்தான் நீ தலைநிமிர்ந்து நிப்பே...!''

''பட் ஐ ஆம் எ கேர்ள்... அன்மாரீட் கேர்ள்.''

''நீ இன்னொருத்தனைக் கல்யாணம் பண்ணிண்டப்புறம் இங்கே என்னுடன் பேச வந்தால் அப்ப மட்டும் உன்னைப் பத்திப் பேச மாட்டார்களா?''

''யூ ஆர் கரெக்ட், மிஸ்டர் கான்வே... என் ஹஸ்பெண்ட் முதற் காரியமா விவாகரத்து பண்ணுவான்!''

''ஒரு சின்ன விஷயத்தைப் பெரிய பிரச்னையாக மாத்தாதே, லாவண்யா... அமெரிக்காவுக்கு வர்றியா?''

''வந்து...?''

''மொதல்லே தேசத்தைப் பாரு... அப்புறம் எங்க ரான்ச்சுக்கு வா, . என் அம்மா, அப்பா, அண்ணன் எல்லோரையும் பாரு... எங்களுக்கு மில்லியன் மில்லியனா சொத்து இருக்கு. ஆனா அதைப் பத்தி லட்சியம் செய்யாதே...''

''அப்புறம்?''

''இந்த கான்வேயுடன் ஒரு வாழ்க்கை அமைச்சுக்க முடியுமான்னு யோசி.''

லாவண்யா சிரித்தாள். ''ஐ லைக் யூ, மிஸ்டர் கான்வே... ஏன்னா உங்க மனசு பால் மாதிரி... பேச்சு பிசிறு இல்லாத பேச்சு... ஆனா உங்களுடன் ஒரு வாழ்க்கையை அமைத்துக்கொள்ளும் அளவுக்கு உங்களை என் மனசு விரும்பவில்லை...''

''அது தெரியும் எனக்கு, லாவண்யா... அதுக்குத்தான் உன்னை அமெரிக்காவுக்கு அழைக்கிறேன். உங்க தேசத்தின் சூழ்நிலையில் நான் ஒரு அன்னியன். ஆனா எங்க தேசத்தில் நீ என்னைப் பார்க்கும்போது உன் பார்வையின் கோணமே மாறும்... என்னை இன்னும் நன்றாகப் புரிந்து கொள்வாய்.''

''நான் ஒரு ஹிந்து.''

''ஹிந்து என்பது ஒருமதத்தைச் சேர்ந்தவள் என்பதை மட்டும் குறிக்கவில்லை. ஹிந்து என்பது ஒரு பெரிய ஆலமரம் போன்ற ஸ்தாபனம். நானும் ஒரு ஹிந்துதான் லாவண்யா... நீ சொல்றியே ஹிந்து மதம்னு அதிலேயே நீ மற்ற மதங்களையும் பார்க்க முடியும்!''

''நான் பிராக்டிகல் கேர்ள். யதார்த்த வாழ்க்கையைத்தான் என்னால் நம்ப முடியும்.''

''ஓகே!'' என்ற கான்வே, ''நீ சரின்னு சொல்ற வரைக்கும் அல்லது உனக்குக் கல்யாணம் ஆகும்வரைக்கும் நான் இந்த மதுரையை விட்டு, இந்த பாண்டியன் ஓட்டலை விட்டுப் போகப் போறதில்லை'' என்றான்.



4,600 ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு லட்சம் பேர் முப்பது வருடங்களில் கட்டி முடித்த எகிப்தி லுள்ள பிரும்மாண்டமான பிரமிட்டை இப்போது கட்டுவதென்றால், 405 பேர் போதும்; ஆறே வருடங்களில் கட்டி விடலாம்; செலவுதான் ஒன்பது கோடி ரூபாய் அதிகமாகும்!

-ஸ்போர்ட்ஸ் இல்லஸ்டிரேட்டட் - முத்து

---

''நம்பிக்கை வீணானால் ஏமாற்றம் வரும், கான்வே... ஏமாற்றம் வந்த மனசிலே துக்கம் வரும். நிம்மதி இராது.''

''தப்பு... நம்ம ஹிந்து மதத்திலே மனசை அடக்க வழி சொல்லியிருக்கு.''

''அந்த வழியை இன்னொரு நாள் சொல்லுங்க... நான் புறப்படறேன்.''

''ஓகே... நானும் சம்ஸ்கிருத பாடத்துக்குப் போகணும்'' என்றான் கான்வே.

லாவண்யா எழுந்தாள்.

''வீ மீட் நெக்ஸ்ட் வாடர்டே அட் ஸிக்ஸ்டீன் ஹவர்ஸ்!'' என்றான் அவன்.

''வெள்ளிக்கிழமை போன் பண்ணறேன்.''

• • •

அவன் சென்ற பிறகு கான்வே குளிக்கச் சென்றான். குளித்த பின் வேட்டியைக் கட்டிக் கொண்டு ஒரு பெரிய அங்கவஸ்திரத்தால் மார்பை மறைத்துக்கொண்டான். நெற்றி நிறைய விபூதியைப் பூசிக் கொண்டு, குங்குமத்தைச் சரியாக இட்டுக் கொள்ளக் கண்ணாடிக்குச் சென்றான்.

வடக்கு வெளிவீதியில் பஸ்ஸை விட்டு அவன் இறங்கியபோது மணி ஆறரை. தமிழ்ச் சங்கம் ரோட்டை நோக்கி நடந்து கொண்டிருக்கையில், சம்ஸ்கிருத ஆசிரியர், சீனிவாச வரதாச்சாரியார் எதிர்ப்பட்டார்.

''நமஸ்காரம்ஜீ!''

''என்னப்பா கான்வே அதுக்குள்ளே வந்துட்டே....''

''நீங்க உங்க டயத்துக்கு வாங்க. நான் பாடசாலையிலே படித்துக்கொண்டிருக்கேன்!''

''ஏன் வீட்டுக்கு வாயேன். நீ எங்க வீட்டுச் சர்க்கரைப் பொங்கலைச் சாப்பிட்டதில்லையே?''

''எதுக்கு சார் சிரமம்?''

''சிரமமா...ஒரு அமெரிக்கன் எங்க வீட்டுப் பொங்கலையும் புளியோதரையையும் தின்னா எனக்குத்தான் பெருமை, வா... பக்கத்திலே தான் இருக்கு.''

கான்வேக்குப் பசி இல்லை. இருந்தாலும் ஆசிரியர், அதுவும் எழுபது வயதைத் தொட்டுக்கொண்டிருக்கும் பெரியவர் மனமுவந்து அழைக்கிறார்.

அவன் பின்தொடர்ந்து சென்றுகொண்டிருக்கையில்தான், எதிர்பாராத வண்ணம், ஆசிரியர் மூலமாக ஒரு சந்திப்பு நேர்ந்தது. இந்த இன்றைய சந்திப்பே நாளைக்கு அவனுடைய வாழ்க்கைப் பாதையில் ஒரு பெரும் குறுக்குச் சுவராக வளரப் போகிறது என்பதை அவன் உணரவில்லை.

இதற்குக் காரணம், கான்வேக்கு ஜோசியம் தெரியாததுதான். (தொடரும்)

சென்னை பைலட் AC ஸ்ரீகிருஷ்ணா அசோக் AC நூர்ஜஹான்

மற்றும் தென்னகமெங்கும் நடைபெறுகிறது

நடிகர்திலகம் சிவாஜிகணேசன் நடிக்கும்

கோமதிசங்கர் பிக்சர்ஸ்

# அவன் ஒரு சரித்திரம்

ஈஸ்ட்மென் கலர்

டைரக்ஷன்

K.S. பிரகாஷ் ராவ்

தயாரிப்பு

K.S. குற்றாலிங்கம்





வெட்டுமேஜை!

# மதுரமாகத் தொடங்கியது: மனம் கவரத் தொடரட்டும்!

☐ தமிழகத்தில் பல பிரபல தமிழ் பத்திரிகைகள் பத்திரகாளி விமர்சனம் எழுதும் போது, அதன் மூலக் கதாசிரியர் பெயரை விமர்சனத்தில் குறிப்பிடாமல் விட்டு விட்ட போது 'கல்கி' விமர்சனம் கதாசிரியருக்குரிய மதிப்பினை விமர்சனத்தில் தந்தது எனக்குப் பெருமகிழ்ச்சியை அளித்தது.

சேலம்
6–1–77 மகரிஷி

☐ திரு. நா. பாவின் ''குறிஞ்சி மலர்'' மதுரையை நிலைக்களனாகக் கொண்டு கல்கியில் வெளி வந்து அனைவராலும் பாராட்டப் பெற்ற நாவல். அதுபோல் இப்பொழுது திரு பி. வி. ஆர். அவர்களின் மதுரநாயகியும் முற்றிலும் மதுரையை நிலைக்களனாகக் கொண்டு முதற் அத்தியாயத்திலேயே என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டது. எடுத்தவுடன் ஆரவாரத்துடனும் ஸஸ்பென்ஸுடனும் அருமையாக ஆரம்பமாகிவிட்டது.

தூத்துக்குடி
5-1-77 மா. வா. கா. ரா. தங்கபாண்டியன்

☐ பிரதமரின் 'காகிதப் புலிகள்' பிரசங்கத்தைக் குறிப்பிட்டு அருமையான தலையங்கம் எழுதியுள்ளீர்கள்.

பல மேநாடுகளில் இப்போது சோஷலிஸம் புது அர்த்தங்களுடனும் புது நோக்குகளுடனும் தத்துவ வளர்ச்சியடைந்து வருகிறது. வெறும் வர்க்கப் போராட்ட வறட்டு வாதங்கள் மறைந்து வருகின்றன. ஜெர்மனி நாட்டின் சோஷல் டெமாக்ரடிக் கட்சியின் கொள்கைகளோடு சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை ஒப்பிட்டுப் பேசிய திரு மஸானி அவற்றுக்கிடையேயுள்ள ஒற்றுமைகளை விளக்கினார். இந்த 'இருபதாம் நூற்றாண்டு சோஷலிஸ'த்தை சுதந்திரக் கட்சி வரவேற்பதாகக் கூறினார். ஆக, சோஷலிஸம் என்ற வார்த்தையில் மயங்குகிறவர்கள் சுதந்திரக் கட்சியை இருபதாம் நூற்றாண்டு சோஷலிஸ்ட் கட்சியாக ஏற்றுக் கொள்வதில் சுதந்திரக் கட்சிக்கு ஆட்சேபம் இருக்காது.

சென்னை–88
6–1–77 கி. ஸ்ரீனிவாசன்

☐ மக்கள் நாயகத்துக்கு நல்லதொரு காவலாளாகவும் நளினமானதொரு நடங்காட்டியாகவும் விளங்குவது பொதுத் தணிக்கைக் குழு. ஆனால் அரசாங்கமோ நிர்வாகமோ இதன் குரலைக் கொஞ்சமும் மதிப்பதில்லை என்பதே நமது ஜனநாயகத்தின் வேதனை மிக்க வரலாறாக உள்ளது: ''மத்திய அரசிலும் மாநில அரசுகளிலும் உள்ள நிர்வாகிகள், – எத்தனை முறை கேட்டாலும், இந்தக் குழுக்களுக்கு வேண்டிய விவரங்களைத் தருவதில்லை; குழுக்கள் சுட்டிக்காட்டும் குற்றங்களுக்குச் சரியான விளக்கம் தர வேண்டும் என்ற அக்கறையே இவர்களுக்கு இருப்பதில்லை; அவைகளைத் திருத்திக் கொள்ளும் போக்கும், நிர்வாக இயந்திரத்தில், போதிய அளவு காணப்படவில்லை!'

ஒவ்வொரு பொதுத் தணிக்கைக் குழுவின் அறிக்கை வெளிவரும் போதும் இந்தப் பெரிய குறை, அந்தக் குழுவினால் சுட்டிக்காட்டிக் கண்டிக்கப்படுகிறது. அண்மையில் (1-12-76) வெளியிடப்பட்டுள்ள மே. வ. சட்டசபைப் பொ. த. குழுவின் அறிக்கையிலும் இதே குற்றச்சாட்டு உள்ளது.

தணிக்கைக் குழுவின் குரலையே காதில் வாங்காமல், ஒவ்வோர் அரசும் தன் தன் வழியிலேயே போய்க் கொண்டிருப்பதானால், அப்படி ஒரு குழு எதற்காக?

புதுடில்லி
10-12-76 சாலை இளந்திரையன்

☐ கும்பகோணம் மின்சார நிறுவனத்தைத் தமிழ்நாடு மின்சார வாரியம் எடுத்துக்கொண்டதிலிருந்து பொது மக்கள் பல விதத்திலும் துன்பம் அனுபவித்து வருகிறார்கள். மீட்டர் வாடகை ரூ 1லிருந்து ரூ 2 ஆக்கப்பட்டது. தாமதமாக பில் தொகை செலுத்தினால் வட்டி 0.25 காக என்பதிலிருந்து 0.50 காக ஆக்கப்பட்டது. பிரதிமாதம் பில்தொகை மறுமாதம் 7 தேதி வரை கட்டலாம். பிறகு ப்யூஸ் எடுக்க ஆட்கள் வருவார்கள். ப்யூஸ் எடுத்து விட்டால் ரூ. 2 அபராதத் தொகை செலுத்தினால் மறுபடியும் ப்யூஸ் போடுவார்கள். இதுதான் கம்பெனி வழக்கம். இப்போது 7-ம் தேதிக்கு மேல் பணம் செலுத்துபவர்கள், ப்யூஸ் எடுத்தாலும் எடுக்கா விட்டாலும், அபராதத் தொகை ரூ. 6.00 சேர்த்துச் செலுத்த வேண்டும் என்று கட்டாயப்படுத்துகிறார்கள்.

எல்லோரும் முதல் தேதி சம்பளம் பெறும் சர்க்கார் சிப்பந்திகள் அல்ல. பலருக்குச் சம்பளமே 7-ந் தேதிக்குத்தான் கிடைக்கிறது. மின்சார பில் தொகையே ரூ. 5.00 தான் இருக்கிறவர்களும்கூட ரூ. 6.00 சேர்த்துக் கட்ட வேண்டும் என்பது மிகவும் கொடுமையானதாக இருக்கிறது.

கும்பகோணம்
13-12-76 பி. சுப்பிரமணியன்



# மகளிர் பகுதி

## முதல் பேச்சு!

நான் அப்பொழுது பி. ஏ. முதல் வருட வகுப்பில் படித்துக் கொண்டிருந்தேன். தசரா லீவுக்கு என் பெற்றோர்களுடன் உதகமண்டலத்திற்குப் போய்விட்டு வந்தேன்.

கல்லூரி திறந்தவுடன் என் வகுப்பு ஆசிரியை இலக்கியச் சங்கத்தில் ஒரு சொற்பொழிவு நிகழ்த்துமாறு என்னை அழைத்தார். நானும் சரியென்று ஒப்புக் கொண்டு என்னுடைய உதகமண்டல அநுபவத்தைப் பற்றியதான பேச்சைத் தயாரித்தேன்.

குறிப்பிட்ட நாளன்று இலக்கிய சங்கத்தின் கூட்டம் நடந்தது. கூட்டத்தைப் பார்த்ததும் மனத்தில் கிலி ஏற்பட்டது. என்னுடைய கட்டுரையைக் கையில் எடுத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்தேன்.

''.....உதகமண்டலத்தில் அன்று கடுங் குளிர். பனிமூட்டம் எங்கும் வியாபித்திருந்தது. என்னல் அக்குளிரைத் தாங்க முடியவில்லை. என் கை, கால்கள் நடுங்க ஆரம்பித்தன.....''

இதற்கு மேல் என்னல் படிக்க முடியவில்லை. நிஜமாகவே என்னுடைய கைகளும் கால்களும் தந்தி அடிக்க ஆரம்பித்தன. வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவர மறுத்தன. நாக்கு உலர்ந்து விட்டது..

என்னுடைய பரிதாப நிலையைக் கண்டு தலைவர் கையிலிருந்த கட்டுரையை வாங்கிக் கொண்டு, ''மாணவிகளே, இன்றைய பேச்சாளர் நம்மைத் தத்ரூபமாக உதகமண்டலத்துக்கே அழைத்துச் சென்று விட்டார். பேச்சாளரினல் அக் குளிரைத் தாங்க முடியவில்லை. ஆகையால் நானே அவருடைய கட்டுரையைப் படிக்கிறேன்''..... என்று கூறிப் படிக்க ஆரம்பித்தார்.



என் முதல் பேச்சு இந்த லட்சணத்தில் அரங்கேறியது!

—டி. மைதிலி

ஒருவர்:

''நான் இரவல் கொடுத்தே பாதிப் புத்தகங்களைத் தொலைத்து விட்டேன்...''

மற்றொருவர்:

''நான் இரவல் வாங்கியே பல புத்தகங்கள் சேர்த்துட்டேன்...!''

— எஸ். சரோஜா





அந்தத் தாய் தன் குழந்தைக்குக் கிண்ணத்தில் சாதம் பிசைந்து ஊட்டுகிறாள். குழந்தையோ வாயைத் திறவாமல் முகத்தைத் திருப்பிக் கொள்கிறது. 'சமர்த்துக் கண்ணேல்லியோ, ஒரே ஒரு வாய் சாப்பிடும்மா' என்கிறாள் தாய். ஊஹூம்! குழந்தை பிடிவாதமே செய்கிறது. வீட்டின் முற்றத்துக் கூரையில் இரண்டு காகங்கள் இதைப் பார்த்தபடி இருக்கின்றன. எப்படியும் சாதத்தை நமக்கு அந்தத் தாய் வைப்பாள் எனக் கருதுகின்றன. அந்தத் தாய் காகங்களைப் பார்க்கிறாள். சட்டென்று ஒரு யோசனை தோன்றுகிறது. ஒரு கவளத்தை உருட்டி எடுக்கிறாள். 'காக்கா, இந்தா நீ வாங்கிக்கோ. ஜெயாவுக்கு வேண்டாம்' என்று கூறியபடி கையை நீட்டு

# நகைப் பெட்டகம்!



மேற்கு ஜெர்மனியின் மத்தியப் பகுதியான பேர்கென்ஃபீல்டில் உள்ளது இடார்—ஓபர்ஸ்டைன். மலைப்பாங்கான பிரதேசத்தில் அமைந்த இவ்வூர் உலக நாடுகளின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் உல்லாசப் பயணிகளை ஈர்க்கிறது. மேற்கத்திய நாடுகளின் நகைப் பெட்டகம் என இதனை வர்ணிக்கின்றனர்.

காரணம் இடார் — ஓபர்ஸ்டைனில் இயந்திரங்கள் மூலம் ஒரே சமயத்தில் நூற்றுக் கணக்கான கற்களை (Semi Precious) ஒரே சீராகப் பட்டை தீட்டி பாலிஷ் செய்து தயார் செய்கின்றனர். இவ்வூரின் முக்கிய தொழில் கற்கள் தயார் செய்வது. மேலும் இந்த அரிய கற்களில் நேர்த்தியான கலைப் பொருட்களும் தயாராகின்றன. பறவைகள், மிருகங்கள், ஆஷ்ட்ரே முதலியன. இவற்றை வசதி படைத்த உல்லாசப் பயணிகள் வாங்குகின்றனர். நேர்த்தியாகப் பலவித டிசைன்களில் நகைகள் செய்யும் கைத்திறன் வியக்கத்தக்கது. கற்கள் ஊதா, இளம் பச்சை, மஞ்சள், ஆகாய நீலம், கரும் பச்சை, கறுப்பு வண்ணங்களில் தயாராகின்றன. புலிக்கண் தோற்றமுள்ளவையும் உண்டு. வெள்ளை, அல்லது, ரோஜா வண்ணம் உள்ளவை வெகு அழகானவை. பல வண்ணமுள்ள கல், டோர்மலின் எனப்படுகிறது. பார்க்கப் பார்க்கத் தெவிட்டாது. மகளிர் அணியும் உடையின் நிறத்துக்குத் தகுந்த வண்ண அணிகலன்கள் உண்டு. இத்துடன் அசல் வைரம், மரகதம், நீலம், பவழம், முத்து என நவரத்தினக் கற்கள் பதித்த நகைகளும் விற்பனைக்குப் பெருமளவில் இருக்கின்றன. இந்தச் சின்ன ஊரில் உலக நாடுகளிலிருந்து வரும் நவரத்ன வியாபாரிகள் Borse Diamont என்னும் இருபது அடுக்கு கட்டிடத்தில் ஐரோப்பாவின் ரத்தினக் கற்கள் வியாபாரத்தை நடத்துகின்றனர்!

—மதுரம் மகாதேவன்
மேற்கு ஜெர்மனி



“தோட்டத்திலே காய்கறித் தோட்டம் போட்டீங்களே... என்ன - என்னவெல்லாம் வந்தது?”

“ஆடு வந்தது, மாடு வந்தது, பன்றி வந்தது; அணில் வந்தது, கோழி வந்தது!”

— எஸ். சரோஜா



ரோமாபுரியில் முன் காலத்தில் மக்கள் தங்கள் வீட்டில் காலண்டர் மாட்டிவைத்துக் கொண்டதில்லை. ஒவ்வொரு மாத முதல் நாளிலும் ஊர்ப் பணியாள் ஒருவன் வந்து புது மாதப் பிறப்பைக் கூவிச் செல்வான். ரோம் மொழியில் “கலேர்” என்றால் கூவுதல் என்பது பொருள்.

“கலேர்” என்பதிலிருந்து “காலண்ட்ஸ்” (முதல் தேதி) என்ற சொல் பிறந்து அதிலிருந்து தான் “காலண்டர்” ஏற்பட்டது.

நகவல்: எஸ். துளசி







...கிறாள். காகங்கள் பறந்து வருகின்றன. குழந்தை சட்டென அம்மாவை கட்டிக் கொண்டு ‘ஆ’வென வாயைத் திறக்கிறது. மகிழ்ச்சியுடன் அந்தத் தாய் சாதத்தைத் தன் குழந்தைக்கு ஊட்டி மகிழ்கிறாள்.

ஏமாற்றமடைந்த காகங்களுள் ஒன்று கூறுகிறது: “பார்த்தாயா — கெஞ்சல் — மிரட்டலில் பணியாத குழந்தை இப்போது பணிந்து விட்டதை!” மற்றொரு காகம் சொல்கிறது: “ஆமாம்—தாய்மார்கள் தம் குழந்தைகளுக்குச் சோற்றுடன் • பொறுமை உணர்வையும் கலந்து ஊட்டி விடுகிறார்கள் — பாவம் மனிதர்கள்!”

இலங்கை வானொலி ஒலிமஞ்சரியில் கேட்டு எழுதியவர்: ஜி. அலமேலு.

மணப்பந்தலில் கம்பீரமாக வீற்றிருந்த சதீஷ் தனது வாழ்க்கைத் துணைவியாகப் போகிற தீபாவின் அழகையே கடைக்கண்ணால் ரசித்துக் கொண்டிருந்தான். இன்னும் சிறிது நேரத்தில் அவனது கையிலிருந்த தாலி அவள் கழுத்தில் ஏறி அவன் முடிச்சும் போட்டு விடுவான். 'அந்த முடிச்சுக்குத்தான் என்ன சக்தி!' இப்படி அவன் சிந்தித்த வேளையில் புரோகிதர் ஏதோ சொன்னார்.

நீண்ட அவன் கைகள் நீட்டியபடியே நின்று விட்டன. காரணம், அங்கு திடீரென்று ஏற்பட்ட ஒரு குழப்பம்தான்.

அந்தக் குழப்பம், சுமார் ஏழு மாதங்களே நிரம்பிய ஒரு குழந்தையைக் கைகளில் ஏந்தித் தலைவிரிகோலமாகக் கல்யாண வீட்டுக்குள் வேகமாக நுழைந்த ஓர் இளம் பெண்ணின் உருவில் வந்தது.

''இந்தக் குழந்தை உன்னுடையதுதானா?''

சதீஷ் அந்தப் பெண்ணை ஏறெடுத்துப் பார்த்தான். அவளது கண்கள் அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தன. அவனது முகம் கூம்பியது. தரையை நோக்கியவாறு, 'ஆமாம்' என்று ஈனஸ்வரத்தில் பதில் அளித்தான். அவனது குரல் எங்கோ கிணற்றுக் குள்ளிருந்து வருவது போலிருந்தது.

அவனது பதிலைக் கேட்டுத் தீபா மயங்கி விழுந்தாள். பெண் வீட்டாரின் கோபம் சதீஷின் மேல் ஒருங்கே பாய்ந்தது. 'அயோக்கிய ராஸ்கல்' என்று கூட்டத்தில் ஒருவர் கத்தினார். 'போலீஸைக் கூப்பிடு' என்று இன்னொருவர் கூக்குரல் எழுப்பினார். சதீஷின் பால்ய நண்பன் சாம்பமூர்த்தி மட்டும் குறுக்கிட்டு, அவசரம் அவசரமாக அவனை அங்கிருந்து கடத்திச் செல்லாதிருந்தால், பெண்

# பழி வாங்கும் பாவை!





மர்மத் தொடர்கதை-1

க. ரகுநாதன்

''இந்தக் கல்யாணத்தை நிறுத்துங்கள்; இந்த அநியாயம் நடக்கவே கூடாது!'' என்று கன்னங்களில் கண்ணீர் வழிந்தோடக் கதறிக் கொண்டே அந்தப் பெண் மண மேடையை நெருங்கினாள்.

''உங்களுக்கே இது நன்றாக இருக்கிறதா? என்னைக் காதலித்து மோசம் செய்து விட்டு இப்போது இன்னோர் அபலைப் பெண்ணின் வாழ்வையும் பாழாக்கப் போகிறீர்களா? எங்கே, இந்தக் குழந்தையை உங்களுக்கு அடையாளம் தெரியவில்லை என்று சொல்லுங்கள், பார்க்கலாம்!'' என்று கூறி அந்தப் பச்சிளங் குழந்தையைச் சதீஷின் முகத்தருகே நீட்டினாள். அந்தக் குழந்தையும் அவனை அடையாளம் கண்டுகொண்டது போல், தனது பொக்கை வாயை அகலத் திறந்து சிரித்துக் கொண்டே அவன்மேல் தாவ ஆவலோடு கைகளை உயர்த்தியது. தன்னை நோக்கித் தாவிய அந்தக் குழந்தையை அணைக்க அவனை அறியாமலேயே அவனது கைகளும் மேலெழுந்தன. ஆனால், சதீஷ் சட்டென்று தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு தன் கைகளை விலக்கிக் கொண்டான். அவன் கோபம் பொங்க அந்தப் பெண்ணைப் பார்த்து ஏதோ சொல்ல வாயெடுத்தான். அதற்குள் அந்தப் பெண் அவசரமாக அவனை இடைமறித்தாள்.

''இந்தக் கல்யாணம் நடந்தால், இந்தக் குழந்தை தன் தாயை இழந்து அனாதை ஆகிவிடும். இது உறுதி'' என்று தனது கூரிய விழிகளால் அவனைச் சுட்டெரிப்பது போல் பார்த்துச் சூளுரைத்தாள்.

இதற்குமுன் கோபமாக ஏதோ சொல்ல வாயெடுத்த சதீஷ், அவள் கூறியதைக் கேட்டதும் இடியுண்ட நாகம்போல் அடங்கி விட்டான். அவனது முகத்தில் கவலைக்குறிகள் படர்ந்தன. இதற்குள் கூட்டத்தில் சலசலப்பு ஏற்பட்டு விட்டது. மணப்பெண்ணின் மாமா சதீஷைப் பார்த்துக் கேட்டார்:

வீட்டார் சதீஷை அங்கேயே அடித்துப் போட்டிருப்பார்கள். இந்தக் கலாட்டாவில் குழந்தையோடு வந்த அந்த மர்மப் பெண், தான் வந்த காரியத்தைச் சாதித்துக் கொண்டு எங்கோ மறைந்து விட்டாள்.

சதீஷ் தங்கியிருந்த ஹோட்டல் அறைக்குச் சாம்பமூர்த்தி அவனை அழைத்துச் சென்றான். இருவரும் கட்டிலில் அமர்ந்ததும் சாம்பமூர்த்தி கேட்டான்:

''சதீஷ்! இதை என்னால் நம்பவே முடியவில்லை. எதையும் மறைக்காமல் என்னிடம் முழுமையாகக் கூறு.''

சதீஷ் சிறிது நேரம் சுவரையே பார்த்துக் கொண்டிருந்தான். பின்பு, மெதுவாக வார்த்தைகளை அளந்து பேசினான்:

''சாம்பு! என்னை மன்னித்து விடு. இப்போது நான் எதையும் கூறுவதற்கில்லை. காலம் வரும்போது எல்லாவற்றையும் விவரமாகக் கூறுகிறேன். தயவுசெய்து என்னை இப்போது வற்புறுத்தாதே.''

சாம்பமூர்த்தி விடைபெற்றுச் சென்றபிறகு தான் கதவிடுக்கில் சொருகியிருந்த அந்தக் கடிதத்தைச் சதீஷ் பார்த்தான்.

...ந்தை. பழி வாங்கும் படலத்தில் இது தான் முதல் கட்டம். இன்னும் நிறைய இருக்கிறது'' என்று ஆங்கிலத்தில் டைப் செய்திருந்த ஊர் பேர் இல்லாத அந்த மொட்டைக் கடிதத்தைச் சிறிது நேரம் வெறித்துப் பார்த்து விட்டுத்தான் கால்சட்டைப் பைக்குள் திணித்துக் கொண்டான் சதீஷ். அப்போது அவனது அறையின் கதவருகில் ''சார் தந்தி!'' என்ற குரல் கேட்டு சதீஷ் நிமிர்ந்து பார்த்தான்.

**சா**ம்பமூர்த்தி, பெண் வீட்டாரிடம் எப்படியோ கெஞ்சிக் கூத்தாடி சதீஷைப் பற்றி அவர்கள் போலீஸில் புகார் கொடுக்காதபடி செய்துவிட்டுச் சதீஷின் அறைக்குத் திரும்பிய போது அறை பூட்டியிருந்தது. 'ரிஸப்ஷனில்' விசாரித்தபொழுது, சதீஷ், அறையைக் காலி செய்து கொண்டு சென்று விட்டதாகவும், அவன் வேறு எந்தத் தகவலும் கொடுக்கவில்லை என்றும் தெரிய வந்தது.

சதீஷின் செய்கைகள் எல்லாம் சாம்பமூர்த்திக்குப் புதிராகவே இருந்தன. சதீஷிக்குத் தாய், தந்தை, உற்றார், உறவினர் என்று யாருமே இல்லை. பம்பாயில் சுங்க இலாக்காவில் பொறுப்புள்ள அதிகாரியாக வேலை பார்த்து வந்த அவனுக்குப் பால்ய நண்பன் என்று சொல்லிக் கொள்ளச் சாம்பமூர்த்தி ஒருவன்தான் இருந்தான். அவன்தான் சென்னையில் அவனுக்குக் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்திருந்தான். அப்படி இருந்தும், தன்னிடம் கூட எதுவும் சொல்லிக் கொள்ளாமல் சதீஷ் சென்று விட்டது அவனுக்கு மிகுந்த மன வேதனையைத் தந்தது.

**ப**ம்பாயை நோக்கி விரைந்து கொண்டிருந்தது ரயில் வண்டி. அதில் இரண்டாம் வகுப்புப் பெட்டி ஒன்றில் உட்கார்ந்திருந்த சதீஷ் பத்தாவது முறையாகத் தன் கையிலிருந்த தந்தியைப் படித்து விட்டு, 'சரவணனுக்கு என்ன ஆபத்தாக இருக்கும்?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான்.

சரவணனும் சுங்க இலாகாவில் அவனைப்போல் ஓர் அதிகாரி. இருவரும் எவ்வளவோ கடத்தல் கூட்டங்களை ஒன்றுசேர்ந்தே வேட்டையாடியிருக்கிறார்கள்.

ஒரு நாள் அந்தச் சரவணனின் மனைவி காஞ்சனாவும் ஒரே குழந்தை குமாரும் காணாமற் போய் விட்டனர்.

போலீஸார் எவ்வளவோ வலை போட்டுத் தேடியும் காஞ்சனாவும் குழந்தையும் கிடைக்கவேயில்லை. அவர்கள் மறைந்த இரண்டாம் நாள் சரவணனுக்கு ஒரு மொட்டைக் கடிதம் வந்தது. அது தனக்கும் வந்த மொட்டைக் கடிதம் போல் இருந்ததை சதீஷ் உணர்ந்தான். யாரோ சரவணனையும் தன்னையும் பழி வாங்கத் திட்டமிட்டுச் சதி செய்கிறார்கள் என்று அவனுக்குப் புரிந்தது. இப்போது







ஒரு குதிரைப் பந்தயத்தில் நூறு ரூபாய் பணம் கட்டினார் ஒருவர். அவருக்கு முந்நூறு ரூபாய் கிடைத்தது. கிடைத்த முந்நூறு ரூபாய் நோட்டுகளையும் புரட்டிப் புரட்டிப் பார்த்து வாங்கினார்.

"என்ன சார், கள்ள நோட்டாக இருக்குமோ என்று சந்தேகமா?" - கவுண்டரில் இருந்தவர் கேட்டார்.

"சேச்சே, அதொன்றுமில்லே; நான் கொடுத்த நூறு ரூபாய் நோட்டைத் திரும்பக் கொடுத்துவிட்டார்களோ என்றுதான் பார்த்தேன்!" - சாமி

---

சரவணனின் உயிருக்கு ஆபத்து. அப்படியானால்.... தன்னுடைய உயிருக்கும் ஆபத்து. அதை நினைத்துப் பார்க்கும்போது சதீஷின் உடல் நடுங்கியது.

தாங்கள் வேட்டையாடிய கடத்தல்காரர்களில் யாரோ ஒருவர்தான் தங்களைப் பழி வாங்கும் மர்ம எதிரியாக இருக்க வேண்டும் என்று சதீஷுக்குப் புரிந்தது. சுங்க இலாகா அதிகாரிகளுக்கு எதிரிகள் ஏற்படுவது சகஜம்தான். ஆனால் இப்படித் திட்டமிட்டுத் தானும் சரவணனும் பழி வாங்கப்படுவோம் என்று அவன் முதலில் எதிர்பார்க்கவேயில்லை.

சரவணன், மனைவியும் குழந்தையும் காணாமல் போனதால் மனம் ஒடிந்து போயிருந்தான். அதனால் சதீஷின் திருமணத்துக்குக்கூட அவனால் வரமுடியவில்லை. அவன் வராததும் ஒரு விதத்தில் நல்லதுதான் என்று சதீஷ் நினைத்துக் கொண்டான்.

விக்டோரியா டெர்மினஸில் வண்டி நின்றவுடன் சதீஷ் பிளாட்பாரத்தில் குதித்தான். அவன் எதிர்பார்த்தபடி பக்கத்து வீட்டுச் சர்மா அவனுக்காகக் காத்திருந்தார்.

"சரவணனுக்கு என்ன ஆபத்து?" என்று கவலையோடு விசாரித்தான்.

"சரவணனை யாரோ ஒரு பாவி அவன் வீட்டு எதிரிலேயே பண்ணையில் அடித்துப் போட்டிருக்கிறான். நான் அவன் வீட்டுக்குத் தற்செயலாகப் போனது எவ்வளவோ நல்லதாயிற்று. இரத்த வெள்ளத்தில் குற்றுயிராக இருந்த அவனை நான்தான் ஆம்புலன்ஸுக்குப் போன் செய்து ஆஸ்பத்திரியில் சேர்த்தேன். சிறிது தாமதித்திருந்தால் அவன் இறந்திருப்பான். இப்போது கூட அவனுக்குப் பிரக்ஞை வரவில்லை" என்றார் சர்மா.

அவர்கள் ஒரு டாக்ஸி அமர்த்திக்கொண்டு நேராக மருத்துவ மனைக்குச் சென்றார்கள். போகும் வழியில் சர்மா கேட்டார்:

"உன் கல்யாணம் எப்படி நடந்தது? பாவம், நீ உடனே புறப்பட்டு வர வேண்டியிருந்தது. நான் அனுப்பிய வாழ்த்துத் தந்தி கிடைத்ததா?"

"அதைப் பற்றிப் பிறகு விவரமாகக் கூறுகிறேன்" என்று பேச்சை வேறு திசையில் திருப்பி விட்டான்.

சரவணன் மயக்க நிலையிலேயே இருந்தான். அவனது தலையில் பெரிய கட்டு போடப் பட்டிருந்தது. சதீஷ். அவன் பக்கத்திலேயே கவலையோடு உட்கார்ந்திருந்தான். சர்மா அவனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்று விட்டார். ஒரு மணி நேரம் கழித்துச் சரவணனுக்குப் பிரக்ஞை வந்தது. அவன் நண்பனை அடையாளம் கண்டு கொண்டு, தன்னிடம் ஏதோ சொல்லச் சமிக்ஞை செய்வது போல் சதீஷுக்குத் தோன்றியது. தனது காதைச் சரவணனின் வாயருகே கொண்டு போனான். அவனுக்கு 'நாற்... நாற்' என்று மிகவும் மெல்லியதாக ஏதோ கேட்டது போலிருந்தது. அதற்கு மேல் சரவணனால் ஏதும் பேச முடியவில்லை. அவனது கண்கள் உள்ளுக்குச் செருகிக் கொண்டன. அவன் மீளா நித்திரையில் ஆழ்ந்தான்.

சதீஷ் 'கோ'வென்று கதறி அழுது விட்டான்.

சரவணன் மறைந்து மூன்று நாட்களாகியும் அவனால் தன் துயரத்தை மறக்க முடியவில்லை. பேச்சுக்குப் பேச்சு அவனையே நினைத்துக்கொண்டு அழுதான்.

"சதீஷ்! உன் மன வேதனை எனக்கு நன்றாகப் புரிகிறது. ஆனால் உன்னைவிட நான்தான் அதிகமாக அவதிப்படுகிறேன். மனைவியையும் குழந்தைகளையும் ஒரு விபத்தில் இழந்து தனி மரமாகிவிட்ட நான், சரவணனை என் மகனாகவும், காஞ்சனாவை என் மருமகளாகவும் பாவித்து வந்தேன். குழந்தை குமாரிடம் கொஞ்சுவதில் இன்பம் கொண்டேன். அப்படிப்பட்ட நானே சமாளித்துக் கொண்டிருக்கும்போது நீ உன் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும்" என்றார் சர்மா.

சர்மா சொல்வதிலும் நியாயம் இருப்பதாகப் பட்டது அவனுக்கு.

அன்று அவனுக்குத்தன் அலுவலகத்துக்கு ஒரு கடிதம் அனுப்ப வேண்டியிருந்தது. சர்மாவிடம் டைப்ரைட்டர் இருந்தால் அதில் 'டைப்' செய்து கொள்ளலாமே என்று அவரிடம் அனுமதி கேட்டான்.

"அதற்கென்ன, தாராளமாக அடித்துக் கொள்" என்று கூறிச் சர்மா அவனை டைப்ரைட்டர் வைத்திருக்கும் அறைக்கு அழைத்துச் சென்றார். அவனை அங்கே விட்டு விட்டுத் தாம் ஓய்வு எடுத்துக் கொள்ளச் சென்று விட்டார்.

சதீஷ் 'டைப்' அடித்துக் கொண்டிருந்தான். திடீரென்று அவனது கைகள் 'டைப்' செய்வதை நிறுத்தின. அவனது மூளையில் ஏதோ ஓர் எண்ணம் சட்டென்று பளிச்சிட்டது. உடனே தன் பையிலிருந்த அந்த மொட்டைக் கடிதத்தை எடுத்து அதில் இருந்த எழுத்துக்களைத் தான் 'டைப்' செய்த எழுத்துக்களோடு ஒப்பிட்டுப் பார்த்தான். அதில் எந்த எழுத்துக்களெல்லாம் மழுங்கியிருந்தனவோ அந்த எழுத்துக்களே இதிலும் மழுங்கிக் காட்சி யளித்தன. அவனால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. 'அப்படியும் இருக்குமா!' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டவன் அந்த அறையை ஆராயத் தொடங்கினான்.

அவனது கண்களுக்கு முதலில் பட்டது அவன் இதுவரை உட்கார்ந்திருந்த நாற்காலி








தெய்வீக மணம் பரப்பும்
அற்புத சந்தனம்!






# டி.எஸ்.ஆர்

"கோகுல்" சந்தன டாப்லட்
"கோகுல்" மாலா வத்தி
"கோகுல்" மட்டிப்பால் வத்தி
ரகங்கள்.

## டி. எஸ். ஆர். & கோ.,

'கோகுல் கார்டன்ஸ்' கும்பகோணம்.

Criterion TSR 3375 TMD

தான். இதன் முன்னங்கால்கள் ஆணிகளால் தரையில் பொருத்தப்பட்டிருந்தன. பின் கால்களில் 'கீல்' வைக்கப்பட்டிருந்தது. அவன் நாற்காலியைப் பின் பக்கமாகச் சாய்த்தபோது ஒரு சிறிய கதவும் தரையிலிருந்து நாற்காலியோடு மேலெழுந்தது. சரவணன் ''நாற்...நாற்'' என்று சொல்ல வந்தது 'நாற்காலி'யாகத்தான் இருக்கும் என்று நினைத்தான். அந்த நாற்காலியின் மர்மத்தைச் சரவணன் எப்படியோ கண்டு பிடித்திருக்க வேண்டும். அதனால்தான் அவனுக்கு அந்த ஆபத்து ஏற்பட்டிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான்.

அந்தப் பலகையை முழுமையாகத் திறந்து கொண்டு அங்கு தெரிந்த படிக்கட்டுகள் வழியே சதீஷ் மெதுவாகக் கீழே இறங்கினான். உள்ளே பாதாள அறை மாதிரி ஏதோ தெரிந்தது. ஒரே இருட்டாக இருந்ததால் அவனுக்கு ஒன்றும் சரியாகத் தெரியவில்லை. சுவரைத் தடவியபோது ஒரு 'ஸ்விட்ச்' அவன் கையில் படவே அதைத் தட்டி விட்டான். சட்டென்று அறையில் வெளிச்சம் பரவவே அவன் கண்கள் கூசின. வெளிச் சத்துக்குக் கண்கள் பழகி விட்ட பிறகு அவன் அறையை ஆராய்ந்தான்.

அறையின் ஒரு மூலையில் காஞ்சனாவும் குழந்தை குமாரும் படுத்திருப்பதைக் கண்டவன் அங்கு விரைந்து சென்றான். அருகில் சென்றவன் ஏதோ சந்தேகப்பட்டுக் காஞ்சனாவின் நாசியருகே விரலைக் கொண்டு போனான். அவள் மூச்சு அடங்கி விருந்தது. குழந்தைக்கும் அதே கதிதானோ என்று பயந்து அதைக் கவனித்தான். அது இழை மூச்சு ஓடத் தூங்கிக் கொண்டிருந்தது. இனிமேலும் அங்கிருந்தால் ஆபத்து என்று குழந்தையைத் தூக்கிக் கொண்டு மேலே செல்லத் திரும்பினான்.

அப்போது 'பட்' என்ற சத்தம் கேட்டு அவன் திடுக்கிட்டான். ஒரே எட்டில் படிக்கட்டை அடைந்தான். அவன் இறங்கி வந்த வழி அடைக்கப்பட்டிருந்தது. படிகளில் ஏறித் 'தடதட' வென்று எத்தனை தட்டியும் பயன் இல்லை.

சதீஷ் சர்மாவைச் சபித்தான். மலர்ந்த முகத்துடன் தங்களோடு பழகிய அந்த மனிதர் எப்பேர்ப்பட்ட நயவஞ்சகர்!' தன்னையும் அந்தப் பச்சிளங் குழந்தையையும் காஞ்சனாவைப் போல் பட்டினி கிடந்து சாகடிக்க அவர் திட்டமிட்டிருக்கிறார் என்று நினைத்தபோது அவனுக்கு உள்ளம் கொதித்தது.

கையிலிருந்த குழந்தையை மெதுவாகத் தரையில் கிடத்திவிட்டு மூடியிருந்த அந்தக் கதவைத் திறப்பதற்கு ஏதாவது ஆயுதம் கிடைக்குமா என்று சதீஷ் அந்த அறையை நோட்டம் விட்டான். அதற்குள் அறை விளக்கு அணைந்தது. இதுவும் சர்மாவின் வேலையாகத்தான் இருக்கும்! பாவி!'

இனிமேலும் அந்த இருட்டில் தேடுவதில் பிரயோசனம் இல்லை என்று தன்னிடம் எப்போதும் இருக்கும் பேனாக் கத்தியைப் பாக்கெட்டிலிருந்து எடுத்துக் கதவின் தாழ்ப்பாள் இருக்கும் பக்கமாகப் பேனாக் கத்தியால் குத்த ஆரம்பித்தான். அரை மணி நேர முயற்சிக்குப் பின் அவனது கை உள்ளே போகும் அளவுக்கு அந்தக் கதவில் துவாரம் ஏற்பட்டது. அதன் வழியே கையை விட்டுக் கதவின் தாழ்ப்பாளைத் திறந்தான்.

குழந்தையை எடுத்துக் கொண்டு மேலே வந்தவன் ஆபத்து விடவில்லை என்று வெகு ஜாக்கிரதையாகவே நடந்து கொண்டான். எதிரி ஏதாவது மறைவிடத்திலிருந்து அவனைத் தாக்கலாம் அல்லவா? அடிமேல் அடி எடுத்து அந்த அறையை விட்டு ஹாலுக்குச் செல்லும் நடையை அடைந்தான். எங்கும் ஒரு பயங்கர அமைதி நிலவியது.

ஹாலின் வாயிலை அடைந்து அங்கிருந்த திரையை மெதுவாக விலக்கி உள்ளே பார்வையை ஓட்டினான். அவன் அங்கு கண்ட காட்சி அவனது குடலைப் புரட்டி எடுத்தது. அங்கே சர்மா சோபாவின் மேல் மல்லாந்து கிடந்தார். அவரது மார்பிலிருந்து ஒரு கத்தியின் கைப்பிடி நீட்டிக் கொண்டிருந்தது. அவரது உடலிலிருந்து உயிர் பிரிந்துவிட்டிருந்ததை உணர்ந்தான்.

அவனுக்குச் சர்மாவின் மேல் முன்பிருந்த ஆத்திரமெல்லாம் இப்போது மறைந்து விட்டது. தங்களது நண்பராக இருந்த ஒரே காரணத்துக்காகத் தங்களுடைய எதிரிகளால் சர்மா கொலை செய்யப்பட்டிருப்பதாக நினைத்தான். ஆனால், அந்த டைப்ரைட்டர், பாதாள அறை — இவைகளையெல்லாம் சர்மாவுக்குத் தெரியாமல் மற்றவர்கள் எப்படி உபயோகித்திருக்க முடியும்? தங்களைப் பழி வாங்குவதற்காக யாராவது 'பிளாக்மெயில்' செய்து அவரை ஒரு கருவியாக உபயோகித்துக் கொண்டிருப்பார்களோ என்றும் யோசித்தான். மூளை குழம்பியது.

சதீஷ் போலீஸுக்குப் போன் செய்து, அவர்களை வரவழைத்தான். அவர்களிடம் தனது கல்யாணம் தடங்கலானதிலிருந்து ஒன்று விடாமல் முழு விவரங்களையும் கூறினான். தன் கல்யாணத்தை நிறுத்திய இளம் பெண்ணைப் பிடித்து விட்டால் எல்லா மர்ம



ஒரு கிழக்கு ஜெர்மனி (கம்யூனிஸ்ட் நாடு)க்காரரும் ஒரு மேற்கு ஜெர்மனிக்காரரும் சந்தித்துக்கொண்ட போது, கிழக்கு ஜெர்மனிக்காரர் பெருமையாகச் சொன்னார்: ''உங்களுக்கும் எங்களுக்கும் உள்ள வித்தியாசம் என்னவென்றால், நீங்கள் பணத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கிறீர்கள், நாங்கள் மக்களுக்கு முக்கியத்துவம் தருகிறோம்!''

மேற்கு ஜெர்மனிக்காரர் அமைதியாகக் கூறினார்: ''ஓ! அதனால்தான் நாங்கள் பணத்தைப் பூட்டி வைக்கிறோம், நீங்கள் மக்களைப் பூட்டி வைக்கிறீர்கள் போலிருக்கிறது!''

சம்பத் குமாரி-ஆதாரம்: 'ஹிம்மத்'



நவம்பர் மாதத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட அமெரிக்க ஜனாதிபதி ஜனவரி மாதத்தில் - அதாவது இரண்டு மாதங்கள் இடைவெளிக்குப் பிறகே பதவிப் பொறுப்பு ஏற்பதற்கு ஒரு பழைய காரணம் உண்டு.

போக்கு வரத்து வசதிகள் தற்போதைப்போல் அதிகம் இல்லாத முந்தைய நாட்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனாதிபதி குதிரை வண்டியில் வந்து தான் வாஷிங்டனில் பொறுப்பேற்க வேண்டும். அப்பயண நேரத்தைக் கணக்கில் கொண்டே ஜனாதிபதி தேர்தலுக்கும் பதவி ஏற்புக்கும் இரண்டு மாத காலம் இடைவெளி வைக்கப்பட்டது.

அதுவே தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது.

ஆதாரம்: இந்தியன் எக்ஸ்பிரஸ்
தகவல்: வி. ந. ஸ்ரீதரன்

---

றும் தீர்ந்துவிடும் என்று நினைத்தான். அவளுடைய அங்க அடையாளங்களைக் கூறி அவளைத் தேடிப் பிடிக்கும்படி வற்புறுத்தினான். மூன்று நாட்கள் கழித்துப் போலீஸாரின் முயற்சி பலன் அளித்தது. 'லியான்' அருகே அந்த மர்மப் பெண் கைது செய்யப்பட்டாள்.

போலீஸார் அவளை விசாரித்தபோது, தான் தான் சர்மாவைக் கத்தியால் குத்திக் கொலை செய்ததாக ஒப்புக் கொண்டாள். ஆனால், போலீஸார் எவ்வளவு வற்புறுத்தியும் தான் அவரைக் கொலை செய்த காரணத்தைக் கடைசிவரை அவள் கூற மறுத்து விட்டாள்.

அந்தப் பெண் கூறிய விஷயங்களிலிருந்து சதீஷுக்குச் சர்மாவைப் பற்றித் திடுக்கிடும் தகவல்கள் கிடைத்தன. அவரது உண்மையான பெயர் ரூப்சந்த் என்றும் அவர் முன்பு கள்ளக் கடத்தலில் ஈடுபட்டிருந்தார் என்றும் தெரிய வந்தது. இரண்டு வருடங்களுக்கு முன்பு ஒரு நாள் ரூப்சந்த் தன் மனைவியையும் குழந்தையையும் அழைத்துக் கொண்டு பம்பாயிலிருந்து பூனாவுக்குச் சென்று கொண்டிருந்தான். அவனது காரில் சில கள்ளக் கடத்தல் பொருள்களும் இருந்தன. அப்போது சுங்க அதிகாரிகள் அவன் மேல் சந்தேகப்பட்டு அவனது காரைத் துரத்தினார்கள். லோனவாலாவை நெருங்கியபோது வேகமாகச் சென்று கொண்டிருந்த அவனது கார், சற்றும் எதிர்பாராதவிதமாகச் சாலையிலிருந்து இறங்கி, பள்ளத்தில் உருண்டோடியது. ரூப்சந்தின் மனைவியும் குழந்தையும் அந்த விபத்தில் இறந்து விட்டனர். ரூப்சந்த் மட்டும் எப்படியோ காரிலிருந்து குதித்து மலைப் பகுதிகளில் ஒளிந்து தப்பி விட்டான். அவனைத் துரத்திய சுங்க அதிகாரிகள் தானும் சரவணனும்தான் என்று சதீஷுக்கு இப்போது ஞாபகம் வந்தது.

மனைவியையும் குழந்தையையும் இழந்த ரூப்சந்த், தன்னையும் சரவணனையும் பழி வாங்குவதையே தன் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருக்க வேண்டும் என்று சதீஷ் யூகித்தான். அவனது திட்டப்படி ரூப்சந்த் தன் பெயரைச் சர்மா என்று மாற்றிக் கொண்டு சரவணனின் பக்கத்து வீட்டிலேயே குடிபுகுந்து நெருங்கிய நண்பனாக நடித்திருக்கிறான். சமயம் வரும்போது தன் பழித் திட்டத்தை அமுல் படுத்த முயன்றபோது, தானே ஒரு பெண்ணால் பழிவாங்கப்பட்டிருக்கிறான்.

சதீஷைப் பற்றிய முழு விவரத்தையும் அறிந்த சாம்பமூர்த்தி, தீபாவின் பெற்றோரிடம் சதீஷின் மேல் தவறேதும் இல்லை என்று நிரூபித்து அடுத்த மாதமே சதீஷ்–தீபா திருமணத்துக்கு ஏற்பாடு செய்தார். அவர்களது திருமணம் தடங்கல் ஏதும் இல்லாமல் சுபமாக நடந்தேறியது.

கல்யாணத்துக்குப் பிறகு, எல்லோரும் நடு ஹாலில் சாவகாசமாக உட்கார்ந்திருந்தனர். தீபாவின் தந்தை சதீஷின் பக்கத்திலிருந்த குழந்தை குமாரைச் சுட்டிக் காட்டி ''சதீஷ், இந்தக் குழந்தை காஞ்சனாவின் குழந்தை என்று நீங்கள் ஏன் அப்போதே ஒப்புக் கொள்ளவில்லை? அப்படிச் செய்திருந்தால் அன்று கல்யாணம் தடைப்பட்டிருக்காதே'' என்றார்.

''நான் அப்படிச் செய்திருந்தால், காஞ்சனா அன்றே கொலை செய்யப்பட்டிருப்பாள்! சர்மாவின், அதாவது ரூப்சந்தின் ஆளான அந்த மர்மப் பெண் அன்று கூறிய வார்த்தைகளை நினைவுபடுத்திப் பாருங்கள்.

'''இந்தக் கல்யாணம் நடந்தால், இந்தக் குழந்தை தன் தாயை இழந்த அனாதையாகி விடும். இது உறுதி' என்று கூறினாள். அவளது வார்த்தைகளில் இரு பொருள் இருந்தது. அது எனக்கு மட்டும் தெரியும். அவள் அன்று நடத்திய நாடகத்தால் அவள்தான் அந்தக் குழந்தையின் தாய் என்று எல்லோரும் எண்ணி, அவள் தற்கொலை செய்து கொள்வதாகப் பயமுறுத்தினாள் என்று நம்பினார்கள். அது காஞ்சனாவின் குழந்தை என்று எனக்கு மட்டும் தெரியும் என்பதை அவள் அறிவாள். அவள் 'குழந்தையின் தாய்' என்று குறிப்பிட்டது காஞ்சனாவைத்தான். நான் அவளது கபட வேடத்தைக் கலைக்க முற்பட்டால், காஞ்சனா கொலை செய்யப்படுவாள் என்று அவள் எனக்கு மட்டும் புரியும்படியாக உணர்த்தினாள். கொலை பாதகர்களின் கையில் சிக்குண்ட காஞ்சனாவின் உயிரைக் காப்பதற்காக நான் அந்தக் குழந்தையை என்னுடைய குழந்தை என்று ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. இருந்தும், என்னால் காஞ்சனாவைக் காப்பாற்ற முடியவில்லை.

''நான் குமாரை என்னுடைய குழந்தை என்று அன்று கூறியது ஒரு விதத்தில் தவறாகி விடவில்லை. அனாதையாகிவிட்ட இந்தக் குழந்தை இப்போது என் குழந்தையாகத்தான் வளர்கிறது.''

அப்போது தீபா குறுக்கிட்டு, ''உங்களுடைய குழந்தை என்று தயவுசெய்து பிரித்துச் சொல்லாதீர்கள். நம்முடைய குழந்தை என்று சொல்லுங்கள்'' என்று குமாரை ஆசையோடு வாரி மார்பில் அணைத்து அன்போடு அவன் கன்னங்களில் முத்தம் இட்டாள்.




# விளையாட்டிற்கு ஒரு செட் வாங்குங்கள்







**Bata**

# பாசம் மங்கினால்..

ருக்மிணி பார்த்தசாரதி

ஞானா சாதாரணமாகத் தனியாகத் தான் வேலைக்கு வருவாள். ஒவ்வொரு நாள் தன் மாமியார் வள்ளியோடு வருவதும் உண்டு.

தனியே வரும்போது நிதானமாக வீட்டைப் பெருக்கித் துடைத்து, ஊர் வம்பெல்லாம் அளந்துவிட்டுப் போகும் ஞானா. மாமியாரோடு வரும்போது அதிகமாகப் பேச மாட்டாள். வள்ளி பெருக்க, பின்னாலேயே வாளி நீரைக் கொண்டு வந்து தரையை மெழுகுவாள். பதினைந்து நிமிடங்களில் வேலையை முடித்துக் கொண்டு இருவரும் சென்று விடுவார்கள்.

எனக்குத்தான் ஞானாவின் பேச்சைக் கேட்காததால் எதையோ பறி கொடுத்த மாதிரி இருக்கும். அவளுடைய பேச்சும், சிரிப்பும், வெள்ளரிப் பிஞ்சு போன்ற விரல்களும், சர்ப்பமாய் நெளியும் அந்தக் கொடியிடையும் கண் முன்னேயே வெகு நேரம் நிற்கும்.

ஒருநாள் அவளிடம் வேலை வாங்கும்போது, "வாசல் வராந்தாவை இன்று கழுவிவிடு, பேபி!" என்றேன். பேபி—மகளே—என்று நான் சொன்னவுடன் அவள் முகமெல்லாம் மலர்ச்சி மயமாக, "என்னை "பேபி" என்கிறீர்கள். அதனால் உங்களை இனிமேல் "மம்மி" — தாய் — என்று அழைக்கப் போகிறேன்!" என்றாள்.

அன்றிலிருந்து அவள் வேலைக்கு வரும்போதெல்லாம் "மம்மி" என்று கூவிக் கொண்டுதான் வருவாள். வேலை செய்யும்போதுகூடப் பேச்சு மயம்தான். ஊரில் புதிதாக வந்திருக்கும் திரைப் படங்களைப் பற்றி, தான் வசிக்கும் குடிசையினருகே நடக்கும் சுவாரசியமான சம்பவங்களைப் பற்றி..... பேச்சினூடே சிதறும் சிரிப்பு...

புளிப்புப் பருப்பும், அரிசி ரொட்டியும் அவளுக்குப் பிடித்தமான தின்பண்டங்கள்—அதாவது குழம்பு, தோசை! குழம்புச் சாதமோ, தோசையோ இருந்தால் அவளுக்குக் கொடுப்பேன். அவள் அதை ருசித்துச் சாப்பிடும் அழகே அழகு!

'இந்த ஏழைப் பெண் அற்புதமான அழகை வரப்பிரசாதமாக வாங்கிக் கொண்டு வந்திருக்கிறாள்!' என்று நினைத்துக் கொள்வேன். சருமத்தில் இயற்கையாகவே பளபளப்பு, மென்மை. கண்களில் ஒளி. இடது மூக்கில் துவாரம் தெரியும். ஆனால் மூக்குத்தி இல்லாத நிலையிலும் வெறுமை தோன்றாத நிறை அழகு அந்த வதனத்தில்.

அவளுக்குத் திருமணமாகி நான்கு ஆண்டுகள் நிறைந்து விட்டன. மூன்று வருடங்கள் மாமியார் வீட்டில் இருந்தாள். வீடு என்றால் 'ஜுக்கி' — குடிசை. மாமனார், மாமியார், இரண்டு மைத்துனர்கள் கொண்ட குடும்பத்தில் வீட்டுக்கு மூத்த மருமகளாகப் புகுந்தபோது இருந்த சுமுகமும் இன்சொல்லும் நாளுக்கு நாள் தேய்வதை உணர்ந்தாள். அதன் பின் சிறு சிறு பூசல்கள், குமைச்சல்கள். கணவன், மனைவிக்குப் புத்தாடை வாங்கிக் கொடுத்து விட்டால், அன்றெல்லாம் மாமியார் அங்கலாய்ப்பாள், வீட்டில் ஏகமாக வீண் செலவாகிறதென்று. காலையில் தேநீர் போடும்போது சற்று இனிப்புக் குறைந்தால், "கை நிறையக் கண்ணாடி வளையல்கள் அடுக்கிக் கொண்டு விட்டாள்; சர்க்கரைக்குப் பணம் இல்லை!" என்பார் மாமனார்.

ஞானா பார்த்தாள். நிலைமை முற்றிலும் கசந்துவிடு முன் ஒதுங்கி விடுவது என்று நிச்சயித்தாள். கணவனிடம் சொன்னபோது அவன் முதலில், "என் பெற்றோரையும், தம்பிகளையும் பிரியச் சொல்கிறாயே!" என்று வெகுண்டு, அவளைப் பிறந்த வீட்டுக்கு அனுப்பி விட்டான், இரண்டு மாதங்கள். பின், மெள்ள மெள்ள, அவள் வாதத்திலிருந்த நியாயத்தை உணர்ந்து கொண்டான்.

கணவனோடு தனிக் குடித்தனம் வைத்தாள் ஞானா. அதாவது மாமியாரின் குடிசைக்கு எதிரிலேயே மற்றொரு குடிசை அமைத்துக் கொண்டு விட்டாள். இருந்தும், சமூகத்தின் விஷ நாக்குக்கு வேலை தராமல், நாளெல்லாம் மாமியார் வீட்டில் இருப்பாள்; இல்லாவிட்டால், மாமியாரைத் தன் குடிசைக்கு அழைத்துப் போய் உட்கார வைத்துப் பணிவிடை செய்வாள்.

மாமியார் வள்ளி மட்டும், "ஞானா வந்த பின் என் பிள்ளை மாறி விட்டான்!" என்று சொல்வதை நிறுத்தவில்லை.

எப்போதாவது மனம் மிகவும் நொந்து போனால் என்னிடம்தான் சொல்லி ஆற்றிக் கொள்வாள் ஞானா. "பாருங்கள், மம்மி! இவர் (கணவர் காதோராம்) மாதம் பிறந்தால் நூற்றைம்பது ரூபாய் தன் தந்தையிடம் கொடுத்து விடுகிறார். மாமனாருக்கு ஏதோ கடனாம். அதை அடைக்கவாம் இந்தப் பணம். சம்பளத்தில் மிஞ்சுவது நூறு ரூபாய்தான். அதில்தான் நாங்கள் இருவரும் காலம் தள்ளுகிறோம். இந்த நிலையில்

நான் இரண்டு மூன்று வீடுகளில் வேலை செய்து கொண்டு போகும் முப்பது ரூபாய் மாமியார் கண்ணில் உறுத்துகிறது. ''உனக்கு என்னம்மா! இரண்டு பேரும் சம்பாதிக்கிறீர்கள், பாலாகவே சாப்பிடலாம்!'' என்கிறார். மாமியாரோ வீட்டு வேலை செய்தே மாதம் ஐம்பது ரூபாய் சம்பாதிக்கிறார். இதை ஒரு நாள் நான் கட்டிக் காட்டினபோது, ''பாவிப் பெண்ணே! உன் கொள்ளிக் கண்ணைப் போட்டு விட்டாயே! நான் ஜுரம் வந்து படுத்து விடுவேனே!'' என்று கையிலிருந்த தேநீரைச் சாக்கடையில் கொட்டி விட்டுப் புலம்பித் தீர்த்து விட்டாள்!''

''பிள்ளைக்குத் திருமணமான பிறகு அவளை அன்னியமாக நினைப்பது இந்தச் சண்டிகரில் மட்டுமில்லை, எல்லா மாநிலங்களிலும் நடப்பதுதான்!'' என்று அவளுக்கு ஆறுதல் சொல்வேன்.

நிதானமாக வேலை செய்து கொண்டிருக்கும் ஞானோவிடம் சட்டென்று ஒரு பரபரப்புத் தோன்றினால் அதற்கு ஓர் அர்த்தம்தான்— அவள் கணவன் காதோராம் அவளை அழைத்துப் போகச் சைக்கிளில் வந்திருக்கிறான்!

என்ன பேசிக் கொண்டிருந்தாலும் சரி, அதை அப்படியே நிறுத்தி விடுவாள் ஞானோ. அவசரமாக வீட்டைப் பெருக்கி மெழுகுவாள். கணத்துக்குக் கணம் கண்கள் கணவனின் உருவத்தைப் பார்த்துப் பூரிக்கும். ''மம்மி! அவர் வந்திருக்கிறார், பார்த்தீர்களா?'' என்று நாலைந்து தடவைகளாவது சொல்லி விடுவாள்.

''இன்று யோகம்தான். நடக்க மாட்டேன்; சைக்கிளில் 'டபுள்ஸ்' போய் விடுவேன்!'' என்று சந்தோஷப்பட்டுக் கொள்வாள்.

''அவர் பசியாயிருக்கிறார், மம்மி. புளிப்புப் பருப்புச் சாதமோ, அரிசி ரொட்டியோ இருக்கிறதா?'' என்று வெட்கத்தோடு கேட்பாள். அவன் புசிப்பதை மகிழ்ச்சியோடு பார்த்துக் கொண்டிருப்பாள்.

காதோராமுக்கு இருபத்துநான்கு வயது என்று கணிக்க முடியாது. பதினாறு வயதுப் பையனைப் போன்ற தோற்றம். சிரித்த உருண்டை முகம். நல்ல கறுப்பு. ஆனால் சந்தன நிறத்தினளான ஞானோ அவன் அருகே நின்றால், ஜோடி மிகப் பொருத்தமாக இருக்கும். அதென்னதான் அதிசயமோ! அவன் கறுப்பு, அவள் நல்ல நிறம். அவனுக்கு உருண்டை முகம், அவளுக்கு நீண்ட வதனம். இருவரும் ஏறக்குறைய ஒரே உயரம் இருந்தும் ''அழகான ஜோடி!'' என்றுதான் சொல்லத் தோன்றும்.

ஒரு நாள் நான் ஞானோவைக் கேட்டேன்: ''நீ சைக்கிளில் உன் கணவன் பின்னால் உல்லாசமாகச் சென்றால், லாலி ஒன்றும் சொல்ல மாட்டாளா?''

''ஆ! எனக்கென்ன பைத்தியமா? எங்கள் குடிசையை நெருங்கும்போதே நான் இறங்கி விடுவேன். அவர் சைக்கிளில் 'விர்'ரென்று முன்னால் போய் விடுவார். நான் பின்னால் நடந்து வருவேன்'' என்ற



## க்ஷேத்திர பரிபாலன சங்கம்

பல ஊர்களில் சில விஷ்ணு ஆலயங்கள் அன்றாடம் பூஜை செய்வதற்கோ தீபம் வைப்பதற்கோ கூட வசதி இல்லாத நிலையில் இருக்கின்றன. இக் கோயில்களில் ஒருவேளை நைவேத்யத்துக்கும் இரண்டு வேளை தீபத்துக்கும் குறைந்தது நாளொன்றுக்கு இரண்டு ரூபாயாவது செலவாகும். ஊரில் உள்ளவர்கள் இந்த விஷயத்தில் அக்கறை கொண்டு ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்ற பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இப் பணி சிறக்க 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்ற பெருங் கோட்பாட்டைப் பின்பற்றி ஸ்ரீ காஞ்சி மடத்தின் அனுமதியுடன் ''க்ஷேத்திர பரிபாலன சங்கம்'' என்று ஒரு சங்கம் தொடங்கப் பட்டுள்ளது. ஆஸ்திக அன்பர்கள் தங்களால் ஆன பொருளுதவியைக் கீழ்க்கண்ட இரு விலாசங்களுக்குள் ஒன்றுக்கு அனுப்பி வைக்கலாம். அவர்களுக்கு ஸ்ரீமடத்திலிருந்து பிரஸாதம் அனுப்பி வைக்கப்படும். வெளியூர்களில் உத்தியோகத்தில் இருக்கும் அன்பர்கள் தங்கள் தங்கள் கிராமத்தின் ஞாபகார்த்தமாக இந்தப் பணியில் பெரும் பங்கு கொள்ளக் கோரப்படுகிறார்கள்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரிகள்:

1) G. ரெங்கசாமி மூப்பனார், காரியதரிசி, க்ஷேத்திர பரிபாலன சங்கம், சுந்தரப் பெருமாள் கோயில், கும்பகோணம் தாலுக்கா, தஞ்சை ஜில்லா; 2) மானேஜர், க்ஷேத்திர பரிபாலன சங்கம், ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் ஸ்ரீ மடம், No.1, சாலைத் தெரு, காஞ்சிபுரம் - 2

---

வன், முறுவலூடே, ''ஒவ்வொரு நாள், ''உங்கள் தாயார் வேலை செய்யும் இடத்துக்குப் போய் அவளை 'டபிள்ஸ்'ஸில் அழைத்து வாருங்கள்!'' என்று சொல்வேன். அன்றெல்லாம் மாமியார் என்னிடம் மிக அன்பாக இருப்பார்!'' என்றாள். இருபது வயதில் இந்தப் பெண் எத்தனை தூரம் மனத் தத்துவங்களைக் கற்று விட்டாள் என்று நினைத்து அதிசயித்தேன் நான்.

சிரிப்பும் பேச்சுமாக இருந்த ஞானோ, மெல்ல மெல்லச் சோர்ந்து வருவதைக் கவனித்தேன் நான்.

''என்ன, ஞானோ? ஏன் இப்படி வாடிப் போயிருக்கிறாய்?'' என்று ஒரு நாள் நான் கேட்டபோது, ''இவரை நீங்கள் சமீப காலமாகப் பார்க்கவில்லையே, மம்மி?'' என்று அவள் எதிர்க் கேள்வி போட்டாள்.

''யாரை? காதோராமையா? இல்லையே?''

''இளைத்துத் துரும்பாகி விட்டார் மம்மி. இருமல்... ஜுரம்.... ஆஸ்பத்திரியில் காண்பித்தார்...''

''என்ன சொன்னார்கள்?''

''டி. பி.யாம். இந்த மாதம் முழுதும் வேலைக்குப் போகவில்லை....''

அவளுக்கு ஆறுதல் சொல்லும் நோக்கத்தோடு, ''டி. பி. என்றால் இப்போதெல்லாம் பயமே இல்லை, ஞானோ. ஊசி போடுவார்கள்'' என்றேன்.

''ஆமாம், மம்மி. ஆனால், பாலும் முட்டையும் சாப்பிட வேண்டும் என்கிறார்களே, அதற்கு எங்கே போவோம்?''

நான் பதில் சொல்லவில்லை.

''அரைச் சம்பளம்தான் கிடைக்கும். சில மாதங்கள் இதைக் கொண்டுதான் சமாளிக்க வேண்டும்'' என்றாள் ஞானோ.

''உடம்பு குணமாகும்வரை காதோராம் தன் தகப்பனுக்குப் பணம் தர வேண்டாம். மேலே கொஞ்சம் கடன் வாங்கியாவது சத்தான உணவாகச் சாப்பிடச் சொல்!''

''நான் சொன்னால் அவர் கேட்கிறாரோ, இல்லையோ!''

இரண்டாம் தேதியன்று ஞானோ வேலைக்கு வந்தபோது லாலியும் கூட வந்தான். ஞானோவின் முகம் சிவந்து வீங்கி யிருந்தது. லாலியின் முகத்தில் சிடுசிடுப்பு.

வந்ததும் வராததுமாக, லாலி, ''உங்கள் பேப் என்னை இன்று இழுத்து வந்திருக்கிறாள்!'' என்றான்.

''என்ன விஷயம், ஞானோ?'' என்றேன்.

''அநியாயத்தைக் கேளுங்க மம்மி. அவருக்கு நேற்று அரைச் சம்பளம் கிடைத்தது. அதில் மாமனார் சண்டை பிடித்து நூறு ரூபாய் வாங்கிக் கொண்டு போய் விட்டார். மீதி இருப்பது இருபத்தைந்து ரூபாய். இதில் எப்படி மாதமெல்லாம் நாங்கள் தள்ள முடியும்?'' என்று முறையிட்டாள் ஞானோ.

லாலியோ, ''நூற்றைம்பது கொடுத்துக் கொண்டிருந்தவன், நூறுதானே கொடுத்திருக்கிறான்? எங்கள் கணக்கில் ஐம்பது ரூபாய் துண்டு விழவில்லையா?'' என்று பொரிந்தான்.

எனக்குத் தாங்கவில்லை. ''லாலி! உன் பிள்ளை வியாதியாய்ப் படுத்துக் கொண்டிருக்கிறான். இந்த நிலையில் அவனிடம் பணம் வாங்கலாமா?'' என்றேன்.

''வாங்கா விட்டால்? கடன்காரர்கள் கழுத்தை நெரிப்பார்களே! நானும் என் குழந்தைகளும் பட்டினி கிடக்க முடியுமா?''

''காதோராமும் உன் குழந்தைதான் லாலி!'' என்றேன்.

''அவனுக்கென்ன, பெண்டாட்டி இருக்கிறாள். கெட்டிக்காரி. வேலை செய்து தாங்குவாள்...''

''முப்பது ரூபாய் சம்பளத்திலா?''

''எனக்கென்ன தெரியும், அவள் பாடு, அவள் கணவன் பாடு!''

அதற்கு மேல் பேசிப் பயனில்லை என்பதை உணர்ந்து கொண்டேன் நான். திருமணம் செய்து வைத்தவுடனே பெற்ற மகனைத் தாய் தந்தையர் விரோதியாகக் கருதத் தொடங்கி விடுகிறார்களே, இது என்ன கொடுமை! இப்படி ஒரு விகாரமா, மனித மனத்தில்?

நாட்கள் சென்றன. ''எப்படிச் சமாளிக்கிறாய்?'' என்று ஞானோவைக் கேட்டேன்.

''என் தந்தைக்கு எழுதி நூறு ரூபாய் வரவழைத்தேன். ஆனால் எத்தனை நாட்கள் இப்படியே முடியும், மம்மி? இதற்கு ஏதாவதொரு வழி தேடித்தான் ஆக வேண்டும்!'' என்றாள் ஞானோ.

அவள் தேடிக் கொண்ட வழியும் மனத் தத்துவ அடிப்படையில் இருந்ததில் ஆச்சரியமில்லை.

முப்பதாம் தேதி வேலைக்கு வந்த ஞானோவோடு மற்றொரு பெண்ணும் இருந்தாள்.

''மம்மி! இன்றிரவு நான் என் பிறந்த வீடு போகிறேன். நாளை முதல் இவள் வேலைக்கு வருவாள்!'' என்றாள் ஞானோ.




பரம்பரைப் பணக்காரனும் பஞ்சத்து ஆண்டியும் ஒருவருக்கொருவர் லக்ஷ்மி தேவி இடம் மாறினால் எப்படி நடப்பார்கள் என்பது கதையின் அடிநாதம். வாழையடி வாழையாகக் கொடுத்து வந்த கை இல்லாத நிலையிலும் வீட்டிலுள்ள பொருள்களை விற்றாவது கொடுக்க முன் வருகிறது! பஞ்சத்து ஆண்டிக்குப் பணம் வந்துவிட்ட பிறகும் கருமியிலும் கருமியாகக் காட்சியளிக்கிறான்! பழம் பெருமை பேசிக் களிக்கும் ராவ் பகதூர் ராஜமன்னனுக்குத் 'துதி' பாடும் பால்ய நண்பன் பாலகிருஷ்ணன் நல்லதொரு நலம் விரும்பியும்கூட. புதுப்பணக்காரனான கருமி ஆண்டியப்பனுக்கு அவன் அசட்டுப் பிள்ளையும்துணை நிற்க, ராவ் பகதூர் ராஜமன்னன் வீட்டுச் சம்பந்தமே கிட்டுகிறது! ஊருக்கெல்லாம் வாரி வழங்கி ஓட்டாண்டியாகி விட்ட ராஜமன்னனுக்கு ஒரு பெட்டி துணை நின்று அவர் மகள் ராதாவின் திருமணத்துக்கு உதவுகிறது! அதுமட்டுமா? நாடகம் நீள்வதற்கும் வழி வகுக்கிறது! கடைசி வரை பொறுமையைக் கடைப்பிடித்தால் பெட்டியின் குட்டு வெளிப்படும். வாரி வழங்கிய வள்ளல் வறியவர் ஆனாலும், அவர் வள்ளல் தன்மை ஓர் ஏழை டெயிலராக வந்து உதவுகிறது.

நாடகத்தின் ஆரம்பத்திலிருந்து இறுதி வரை ராவ்பகதூர் ராஜமன்னனாக வந்து பழம் பெருமை பேசி ஜம்பமடிப்பதோடு 'இழந்து' விட்ட பெருமையை நிலை நாட்டத் துடிக்கும் நடிப்பால் உயர்ந்து விடுகிறார், டி.கே.எஸ். சந்திரன். அவரது மனைவி மீனாட்சியாக வரும் வி. ஆர். திலகம் அவரது நடிப்புச் சிறப்புக்கு உறுதுணையாக இருக்கிறார்!

நாடகத்தில் ஹாஸ்யத்துக்கு 'காலிங்பெல்' கந்தசாமியாகச் சிவோகம் வருகிறார்!

'பாரம்பரியம்' பெருங்காயம் வைத்த பாண்டமாக மணக்கிறது! —பி. எஸ். எம்.

---

"அடிப் பாவி! உன் கணவன் இப்படி இருக்கும்போது அவனை விட்டுக் கிளம்புகிறாயே!" என்று சீறி விட்டேன் நான்.

ஞானோ ஆழ்ந்த துயரத்தோடு என்னைப் பார்த்தாள். "அவர் பட்டினி கிடப்பதை என்னால் பார்க்க முடியவில்லை மம்மி!"

"அதுதான் பார்க்காமல் போகிறாயா?"

"இல்லை. அவருடைய நன்மைக்காகத்தான் போகிறேன்!"

"என்ன உளறல் இது, ஞானோ?"

"உளறல் இல்லை, மம்மி. எங்கள் குடிசையும், மாமியார் குடிசையும் எதிரெதிரே தான் இருக்கின்றன. அங்கே ரொட்டியும் சோறும், பருப்புமாகச் சமைக்கிறார்கள். பெற்ற பிள்ளை தானே இவர்? இவருக்குக் கொடுப்பதில்லை. ஏன்?ஏனென்றால்,இவர் ஞானோவின் கணவன். அந்தக் குறையை நீக்கத்தான் போகிறேன்."

அவள் நிறுத்திவிட்டுத் தொடர்ந்தாள்: "...என்னால் வேலையும் செய்து கொண்டு அரை வயிற்றுக்குச் சாப்பிட்டுக் கொண்டு இருக்க முடியாது" என்று மாமியாரிடம் சொல்லி விட்டுக் கிளம்பிக் கொண்டிருக்கிறேன். ஆனால் உண்மைக் காரணம் அதில்லை, மம்மி. நான் சென்றவுடன் என் கணவரிடம் அவர்களுக்குப் பாசம் திரும்பி விடும். "பாவம் காதோ! பெண்டாட்டி கல் நெஞ்சக்காரி. பிறந்த வீடு போய் விட்டாள்" என்று உருகுவார்கள். அவரை அழைத்துத் தங்களோடு வைத்துக் கொள்வார்கள். கடன் வாங்கியாவது அவருக்கு நல்ல ஆகாரமாக அளிப்பார்கள். ஏனென்றால், அவர்களுடைய பாசம் உண்மையானது. என் உருவம் கண்ணில் பட்டுக் கொண்டே இருப்பதால் அந்தப் பாசம் மங்கி விட்டது. நான் சென்று விட்டால் பாசம் மறுபடியும் ஒளி மயமாகி விடும். இரண்டு மாதங்களில் என் கணவர் குணம் அடைந்து விடுவார். எனக்கு வேறு என்ன வேண்டும்? அவர் நீண்ட ஆயுளோடு இருந்தால் சரி..."

"ஆனால் காதோராமே உன்னைத் தவறாகப் புரிந்து கொண்டால்?"

"என் வாழ்வே நாசமாகி விடும். ஆனால் அந்த நிலை ஏற்படலாமோ என்று அஞ்சி நான் இங்கேயே இருந்தால் அவர் உடல் நிலை தேறாது, மம்மி. அவர் நலனுக்காக நான் இதைச் செய்துதான் ஆக வேண்டும். வியாதியோடும் அரை வயிற்றுச் சாப்பாட்டோடும் அவர் படும் வேதனையை என்னால் தாங்க முடியவில்லை மம்மி! நான் தைரியமாகத்தான் போகிறேன். பாருங்களேன், மூன்றே மாதங்களுக்குப் பிறகு நான் உங்கள் வீட்டில் மறுபடியும் வேலைக்கு வருகிறேனா இல்லையா, என்று."

"கட்டாயம் வருவாய் மகளே!" என்றேன் நான். 'கட்டாயம் வருவாள் ஞானோ. 'மம்மி' என்ற அவள் குரல் மறுபடியும் மகிழ்ச்சி மயமாக என் செவிகளில் ஒலிக்கும்!' என்று என்னுள் ஓர் உறுதி நிறைந்தது.

# பிரச்னைகள் தீர

# ஸ்டேன்ஸ் டயர்



ஸ்டேன்ஸ் டயர்
ரீட்ரெடுகள் மிகவும்
நம்பகமானவை.

ஸ்டேன்ஸ் டயர், புகழ்
வாய்ந்த டயர்ஸோல்ஸ்
பிரத்தியேக அம்சங்களை
வழங்குகிறது —
தன்னிகரற்ற நீண்ட
உழைப்பு.

ஸ்டேன்ஸ் டயர் சிக்கன
மானதும் கூட — ஒரு
டயரை பலமுறை
ரீடிரெட் செய்ய, கூடுதல்
வாய்ப்பு — **மிகக்**

**குறைவான செலவில்
பல்லாயிரம் மைல்கள்.**

தாமதமின்றி, சேவை
பெற உடனே
அணுகவும்.

**STANES TYRE**

**ஸ்டேன்ஸ் டயர்**

அண்டு ரப்பர் ப்ராடக்ட்ஸ் லிமிடெட்
திருச்சி ரோடு, கோயமுத்தூர்

<u>தொழிற்சாலைகள்:—</u>
சென்னை, வேலூர்,
திருச்சி, சேலம், மதுரை,
தூத்துக்குடி, பெங்களூர்,
மங்களூர், விஜயவாடா,
செகந்திராபாத், எர்ணா
குளம், கோட்டயம்,
கன்னிக்கோட்டை,
திருச்சூர்.

MAC (B) ST-1/75



# 'மினி' இந்தியா!



சென்னைக்கு வந்திருந்த மாணவப் பிரதிநிதிகள் எல்லோருமே தாற்காலிக எம். எல். ஏ.க்களாக இருந்தார்கள்! ஆம், எம்.எல்.ஏ. விடுதியில் அவர்களுக்கு வசதியாகத் தங்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவ்வப்போது, பல தனியார் ஸ்தாபனங்களும் அவர்களுக்கு விருந்தளித்துக் கௌரவித்தன.

டிசம்பர் மாதக் கடைசி வாரத்தில் சென்னை சர்வகலாசாலை நூற்றாண்டு மண்டபத்தில் பாரதத்தின் பல்வேறு சர்வகலாசாலைகளைச் சேர்ந்த இளைஞர்களின் பிரதிநிதிகள், பல்வேறு கலை நிகழ்ச்சிகளும் அவை சம்பந்தமான விவாதங்களும் நடத்தினார்கள்.

சென்னை, மதுரை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்கள் தவிர வெளி மாநிலங்களிலிருந்து பன்னிரண்டு சர்வகலாசாலைகள் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பி யிருந்தன.

முதல் நாள் கலை நிகழ்ச்சிகள் சூடு பிடிக்கவில்லை. பங்கெடுத்துக் கொள்ள வேண்டிய போபால் சர்வகலாசாலைப் பிரதிநிதிகள் வரவேயில்லை. அண்ணாமலை பல்கலைக் கழகத்தினர் தாங்கள் அன்று தயார்ப்படுத்திக் கொள்ளவில்லை என்று சொல்லி விட்டார்கள். அன்று ஒரு நாள் மாத்திரம், ஒருதொழில் குழுவின் நாட்டிய நாடகத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். மூவாயிரம் பேர் உட்காரக்கூடிய அந்த அரங்கத்தில் என்னைச் சேர்த்து ஏழுபேர் நிறைந்திருந்தோம்! அப்புறம் அமைப்பாளர் திரு தர்மராஜன், வாலண்டியர்கள் எல்லாரையும் உள்ளே நாடகம் பார்க்க அனுப்பி விட்டார்!

ஆனால் மறு நாள் முதல் அரங்கம் களை கட்டி விட்டது.

ஜம்மு காஷ்மீர் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பிரகாஷ் கங்கானி என்பவர்தான் எப்படி கதக் நடனம் ஆடினார்! என்ன அபார லய ஞானம்! பார்க்க வந்திருந்தவர்களைப் பிரமிக்க வைத்து விட்டார். இதே பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த சீமா சர்மா என்ற பெண்மணியின் சாஸ்திரிய இசை அவர் பாடி முடித்துப் பல நிமிடங்கள் ஆன பிறகும் செவிகளில் ரீங்காரம் செய்தது.

இதுவரை பல்கலைக் கழக மாணவ மாணவிகள் கருத்துப் பரிவர்த்தனை (செமினார்) களுக்காகக் கூடியிருக்கிறார்கள். ஆனால் கலை நிகழ்ச்சிகளையும் இணைத்துக் கூடியிருப்பது இதுதான் முதல் தடவை. இதை ஏற்பாடு செய்த பெருமை சென்னை சர்வகலாசாலையைச் சேரும். இந்த யோசனையைக் கொடுத்தவர் சென்னை சர்வகலாசாலை அத்தியட்சகர் திரு மோகன்லால் சுகாடியா. யோசனையை உருப்படியாக நிறைவேற்றி வைத்த பெருமை உப அத்தியட்சகர் திரு மால்கம் ஆதிசேஷய்யாவையும், சர்வகலாசாலையின் மாணவர்களுக்கான வேலை வாய்ப்பு மேற்பார்வையாளர் திரு தர்மராஜனையும் அவர்களுடைய உதவியாளர்களையும் சேரும்!

அதிகபட்ச எண்ணிக்கையில் கலந்துகொண்டவர்கள் ஜம்மு பல்கலைக் கழகத்திலிருந்து வந்த பத்தொன்பது பேர்கள். இவர்களில் ஏழுபேர் பெண்மணிகள். சென்னை பல்கலைக் கழகம் ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலிருந்து வரும் பத்துப் பிரதிநிதிகளுக்கு மட்டும் போக்குவரத்துச் செலவை மேற்கொள்ளச் சம்மதித்திருந்தது. ஜம்மு விஷயத்தில் பதின்மூன்று பேருக்கு அந்தச் செலவை மேற்கொள்ள முன்வந்தது. ஆறு பேர் சொந்தச் செலவில் வந்திருந்தார்கள்!

மிகக் குறைந்த அளவில் பிரதிநிதித்துவம்பெற்றது கேரள சர்வகலாசாலை. ஒரே பிரதிநிதி!





மேலே: ஜம்மு சர்வகலாசாலை,
ஹிமாசலப் பிரதேச பல்கலைக்கழகம்.
கீழே: குருக்ஷேத்ரா பல்கலைக் கழகம்.
புகைப்படங்கள்: கிருஷ்ணன், வேங்கடேசன்

ஷில்லாங்கிலுள்ள மலைப் பல்கலைக் கழகத்து (Hill University) மாணவர்கள் மிருந்த சங்கோசிகள் போலும். சமீபத்தில் உருவான பல்கலைக் கழகம்! அவர்கள் இந்த மாதிரி நெடுந்தூரப் பயணத்தை மேற்கொள்ளத் தங்களுக்கு அனுபவம் போதாது என்று ஒதுங்கி விட்டார்கள்! இதை அங்கிருந்து வந்த அந்தச் சர்வகலாசாலை வைஸ் சான்ஸலரே தெரிவித்தார்.

முற்பகலிலும் பிற்பகலிலும், கலை, சிற்பம், இலக்கியம் பற்றிய கருத்துப் பரிவர்த்தனைகள் நடந்தன. அந்தந்தத் துறைகளில் அனுபவம் பெற்ற பலர் தலைமை தாங்கினார்கள். மாணவப் பிரதிநிதிகளின் கேள்விகளுக்குச் சுவையாகப் பதில் அளித்தார்கள்.

நாடகங்களைப் பற்றிய கருத்தரங்கில் கலந்துகொண்ட பீட்டர் கோ என்ற மேலை நாட்டுப் பேராசிரியர், தம் பதில்களை நடித்தே காட்டி விளக்கினார்!

அடுத்த ஆண்டு இந்தக் கலை, கருத்துப் பரிவர்த்தனை விழாவை ஜெய்ப்பூரில் வைத்துக்கொள்ளும்படி கேட்கப் போவதாக, கடைசி நாள் விழாவில் வைஸ் சான்ஸலர் திரு ஆதிசேஷய்யா அறிவித்தார்.

பாரதத்தையே ஒரு சிறிய அளவில் ஒரே பார்வையில், ஒரே இடத்தில் பார்க்க வகை செய்த சென்னைப் பல்கலைக் கழகம் இந்த மாதிரி வருங்கால முயற்சிகளுக்கு வழிகாட்டியிருக்கிறது. அதை நினைத்து நாம் பெருமிதப்படலாம்! **—கோமதி ஸ்வாமிநாதன்**

# லைலா மஜ்னு...

மனித கற்பனையில் முளைத்த மாபெரும் காதல் காப்பியம் லைலாமஜ்னு. உடல் அழிந்தாலும் உயிருக்கு அழிவில்லை, அது கொள்ளும் உயிர்க் காதல் சாகாவரம் பெற்றது என்பதை அதி அற்புதமாகச் சித்திரிக்கும் லைலா-மஜ்னுவைத் திரும்பத் திரும்பத் திரையோவியமாகத் தீட்ட வேண்டும் என்ற எண்ணம் எழுவதில் வியப்பில்லை. அதற்கு உருதுவின் உரை வளம் கைகொடுக்கும் என்ற கணிப்பிலும் குறையில்லை. லைலா-மஜ்னுவின் பிள்ளைப்பிராயத்தைப் பாடலால் அறிமுகப்படுத்தி, அதன் பகைப் புலனாகப் படத்தைக் காட்டிச் செல்வதும் கற்பனை வளத்துக்கு எடுத்துக் காட்டு என்பதில் ஐயம் இல்லை. காதல் ஓவியத்துக்கு இசைத் துணையும் இனிய துணை தானே ? இப்படி எல்லாவற்றையும் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறவர்கள் இன்னொன்றையும் தெரிந்துவைத்துக் கொண்டிருக்கிறார்கள்: லைலாவின் நாயும் மஜ்னுவுக்குப் பிடிக்கும் என்பது அந்நிய - உருது பழமொழி. சினிமா அபத்தங்களை சாமானியனுக்குப் பிடிக்கும் என்பது புதுமொழி. அடி-தடி, கடத்தல் - ஆம், லைலாவைப் பலவந்தமாகப் பறித்துக் கொள்ளுதல் - போன்ற விஷயங்களைக் கதையில் திணித்து அசட்டுக் கற்பனைக்கு உரம் இட்டிருக்கிறார்கள். பலன், அருமையான காதற் காவிய ஃபார்முலாப் படமாகி விட்டது.



திருப்தி தரும் ஒரு விஷயம். ரிஷி கபூருக்குக் கூட நடிக்க வந்திருக்கிறது. ராஜா முராத் அம்பேல்! - மஜ்னு லைலாவின் தந்தையராக வரும் கமல்கபூரும் இஃபதகாரும் தங்கள் பங்கைச் சோடை போக விடவில்லை. லைலாவாக வரும் புது முகம் ரஞ்ஜீதா திரைத் துறையில் நிலைக்கும் முகமாக தோன்றவில்லை. அருமையான படப்பிடிப்பு அத்தனை குறைகளையும் மறைத்து நிற்கிறது.

-ரா. வீ.

★



# சேரமான் காதலி

## கண்ணதாசன்

### அத்தியாயம் 9

## கடற்கன்னி தொடங்குகிறாள்

சேரமான் பூஜை செய்து கொண்டிருக்கிறார்.

''திரிபுரம் எரித்த சிவனே,

உன் திருச்சடையின் இடைவெளிகளுக்குள்ளாகவே உலகம் ஊசலாடிக் கொண்டிருக்கிறது.

ஆசைக்கும் ஞானத்துக்கும் இடையே ஆன்மப் பறவைகள் தவியாய்த் தவிக்கின்றன.

வாழ்க்கை ஒரு நாள் முடிந்து விடும் என்ற எண்ணம் எல்லோருக்குமே இருக்கிறது.

ஆனால் உன் காலடிச் சுவடுகள் முன்னும் பின்னுமாக விழுந்து கொண்டிருக்கின்றன.

எல்லாம் வல்ல பரம்பொருளே,

இவர்கள் அடைக்கலம் புகுவதற்கு உன்னைத் தவிர வேறு இடம் ஏது?''

—இப்போது ஓர் உருதுப் பாடல் அவரது பிரார்த்தனையைக் கலைக்கிறது.

''அரபிக் கடல் அலை இல்லாமல் இருக்கிறது. அழகான படகுகள் இப்போது ஆடாமல் அசையாமல் அதிலே தவழ முடியும். நல்ல படகுகள் உங்களிடம் இருந்தால் கொண்டு வாருங்கள். ஓர் அழகான பஞ்ச வர்ணக் கிளி உங்களோடு பிரயாணம் செய்யத் தயாராக இருக்கிறது...''

—சேரமான் இந்த ஊடுருவலைச் சமாளித்தார்.

திசை திரும்பிய பிரார்த்தனையை மீண்டும் ஒருநிலைக்குக் கொண்டு வந்தார். மறுபடியும் பிரார்த்திக்கத் தொடங்கினார்.

''எல்லாம் வல்ல இறைவா, தண்ணீர் சிலநேரம் நெருப்பாகக் கொதிக்கிறது. நெருப்பும் சிலநேரம் நீராகக் குளிர்ந்து விடுகிறது. சிலரது உணவில் சில நேரங்களில் பூச்சிகள் விழுந்துவிடுகின்றன. சிலருக்கோ அந்தப் பூச்சிகளே உணவாக இருக்கின்றன. ஆழமான கடலிலே கூட சிலர் ஆறு நாட்கள் நீந்தி விடுகிறார்கள். ஆழமில்லாத நதியிலே கூடச் சிலரை முதலைகள் இழுத்துக்கொண்டு போய்விடுகின்றன. ஒரு பொருளைப் பார்த்துக் கொண்டே, சில கண்கள் பாராமல் இருக்கின்றன. சில கண்களோ அந்தப் பொருளைப் பாராமலேயே கற்பனையில் கொண்டு வந்து நிறுத்தி விடுகின்றன. இவையெல்லாம் என்ன? உன் திருவிளையாடலை எப்படி வகைப்படுத்துவது?''

—இப்போது மீண்டும் அந்த உருதுப் பாடல் அவரது பிரார்த்தனையைக் கலைத்தது.

''...உங்கள் படகுக்குப் படகோட்டி தேவையில்லை. என் மெல்லிய கரங்களே அந்த அலைகளைத் தள்ளிவிட முடியும். நாம் மெதுவாகவே செல்ல விரும்புகிறோம். வேகமான படகுகள் நமக்கு எதற்கு? மிருதுவான பட்டுத் துணியின் மீது சாய்ந்து கடற் காற்றைச் சுவைத்தபடி அகன்ற வானத்தைப் பார்த்துக் கொண்டிருப்போம். நிச்சயமாக அந்த வானம் நமக்கு இடையூறாக இருக்கப் போவதில்லை. நல்ல படகு உங்களிடம் இருந்தால் சொல்லுங்கள்...''

—இரண்டாவது முறையாகப் பிரார்த்தனையில் ஊடுருவிய அந்தப் பாடலில் இருந்து விடுபடச் சேரமான் விரும்பினார்.

பூஜை மணியைக் கட கடவென்று ஆட்டினார். பிறகு அதைக் கீழே வைத்துவிட்டுத் தம் இரு காதுகளையும் கைகளால் பொத்திக் கொண்டார்.

மறுபடியும் பிரார்த்தனையைத் தொடங்கினார்.

''...நஞ்சு கழுத்துக்குள்ளும், நாகம் கழுத்தின் மேலும் இருந்தும் வஞ்சமில்லாமல் உலகை ஆளும் எம்பிரானே! உன் சிரசில் ஏறிக் கொலுவிருக்கும் கங்கா தேவி உன்னை யார் யார் தேடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதைச்



சொல்லவில்லையா?

நீ நிஷ்டையில் இருக்கும் போதும் அவள் விழித்துக் கொண்டுதானே இருக்கிருள்? காரிருளில் விளக்கில்லாமல் பிரயாணம் செய்யும் பிரயாணிகளுக்கு நீ காட்டக்கூடிய ஜோதி என்ன? பற்றற்ற நிலை, பந்த பாசங்களை அறுத்தல் என்ற பழைய பாடங்கள் எனக்கு வேண்டாம். நான் எதிலே விழுந்து விட்டாலும், விழுந்த இடமும் நீயே, தள்ளியவனும் நீயே. ஆற்றிலும் சேற்றிலும் நான் விழ நேர்ந்தாலும், அங்கே ஆறும் சேறுமாக இருக்கின்ற நீ, என்னை அதிலே ஏன் விழ வைத்தாய் என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். காமனை எரித்த உன் மூன்ருவது கண் இன்னும் காமத்தை எரித்ததில்லை. உடலை எரித்துவிட்டு உயிரை உலாவ விடும் உன் திருவிளையாடலின் ரகசியம் என்ன?''

இப்போது மூன்ருவது முறையாக அந்த உருதுப் பாடல் அவர் பிரார்த்தனைக்குள் நுழைந்தது.

''...காலமும் அலையும் காத்திருக்கப் போவதில்லை. கடல் அமைதியாக இருக்கும்போதே என்னை அழைத்துக்கொண்டு செல்லுங்களேன்! இந்தப் புல்புல் பறவைக்குத் தானே ஒரு படகைத் தேடிக் கொள்ளும் சக்தி இல்லை. ஓர் ஆதார சுருதிக்கே அது ஆவல் கொண்டிருக்கிறது. வாய் சிறிதாகவும், உடல் பெரிதாகவும் வண்ண வண்ணமாக அமைக்கப்பட்ட பாரசீக ஜாடியைப் போல், ஆசை அதிகமாகவும், அதை வெளியிடும் சக்தி குறைவாகவும் இந்த இளம் பறவை பிறந்து விட்டது. கடலைப் பார்க்கும்போதெல்லாம் கற்பனையில் படகு வந்து நிற்கிறது. அந்தப் படகைப் பார்க்கும்போதெல்லாம் அதிலே ஓர் உறவு தேடப்படுகிறது. நல்ல படகு உங்களிடம் இருந்தால் கொண்டு வாருங்களேன்!''

—இப்போது இந்த உருதுவலைச் சேரமாளுல் சகிக்க முடியவில்லை.

பூஜை மணியை ஓங்கி ஒலித்தபடி, ''என் பிரார்த்தனையைத் திசை திருப்பும் நீ யார்? ஏன் படகு படகு என்று உயிரை விடுகிருய்? உனக்கு என்ன வேண்டும்?'' என்று சத்தமிட்டார்.

''நான், 'படகு' என்று சொல்வது உங்கள் இதயத்தையே'' என்றது அந்த உருதுப் பாடல்.

''என் இதயம் இறைவனின் படகாகி விட்டது!'' என்ருர் சேரமான்.

''அதில் எனக்கும் ஓர் இடம் கொடுக்கக் கூடாதா?'' என்று கெஞ்சிற்று அந்த உருதுப் பாடல்.

''அது ஒருவர் மட்டுமே பயணம் செய்யக் கூடியது!'' என்ருர் சேரமான்.

''அப்படியென்ருல், நானே எடுத்துக்கொள்கிறேனே!'' என்றது அந்தப் பாடல்.

''நீ யாரோ, நான் யாரோ?'' என்ருர் சேரமான்.

''உனக்கும், உன் இறைவனுக்கும் உள்ள பந்தம், எனக்கும் உனக்கும் இல்

லையா?'' என்று கேட்டது அந்தப் பாடல்.

''இல்லை! இல்லை!'' என்று ஓலமிட்டபடியே பூஜை மணியைத் தூக்கி எறிந்தார் சேரமான்.

எறிந்த மணி பலமான ஓசையுடன் விழவில்லை; இலேசான ஓசைதான் கேட்டது. ஆனாலும் திடுக்கிட்டு விழித்தார்.

இதுவரை அவர் கண்டது கனவு.

அவர் தம்மை அறியாமல் தூக்கியெறிந்தது சலீமாவின் பதக்கத்தை.

சலீமா மறதியாகக் கொடுத்துவிட்டுப் போன பதக்கத்தைப் பார்த்தபடியே கட்டிலில் சாய்ந்திருந்த சேரமான் முதலில் குழப்பத்தில் ஆழ்ந்திருந்தார். அதுவரை சலீமாவைப் பற்றிய எந்தச் சிந்தனையும் எழுந்ததில்லை.

யூஜியானுவின் இடத்தில் சலீமாவின் ஓவியம் இருந்ததற்கான காரணமும் அவருக்குப் புரியவில்லை.

சென்று வரும் தத்தைகளை ரசித்ததில்லை.

எல்லோரும் சென்று திரும்பும் மண்டபத்துக்குள் அவர் செல்ல விரும்புவதில்லை.

தமக்கு விருப்பமான ஒரு கோவில் தமக்கே சொந்தமாக இருக்க வேண்டும் என்று நினைப்பவர்.

இப்போது அவர் மனத்தில் விழுந்திருந்த கோடும், ஓர் இனம் புரியாத கீறலே.

பக்தி அதைத் தணிக்குமா? கடற்காற்றுத் தணிக்குமா?

அடிக்கடி, பக்தி செய்வது ஏதாவது ஒரு கோரிக்கைக்காகவே.

ஆகவே இப்போது அவர் கடற்காற்றை நேசித்தார்.

பின் நேரத்து நிலவு பளிச்சென்று வானத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்தது.



தம் சமய மரபுகளையும் தம்மைச் சுற்றிலும் வட்டமிடும் வேறு பறவைகளையும் பின்னிப் பின்னி யோசித்தவாறு அப்படியே உறங்கி விட்டார்.

உறக்கத்தில் வந்த கனவும் ஊடுருவலுமே மேற்கண்டவை.

யூஜியானுவைப் பிரிந்து மறந்த நிலை; பட்டத்து ராணி பத்மாவதியோடும் உறவில்லாத நிலை; பகமையான அவரது மனம் நிலைகொள்ளாமல் தவித்தது.

அவர் விரும்பினால் கேரளத்துக் கிளிகளை ஆயிரத்துக்கு மேல் கொண்டு வந்து ஓரிடத்தில் பார்க்க முடியும்.

அந்தச் சபலமும் அவருக்கு இல்லை.

துல்லிய, தூய்மையான காதல் லயத்தில் சுருதியோடு ராகமாக இழைந்து போகும் அவரது உள்ளம் மெத்தைக்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 9 | 1 | 8 | 6 | 9 | 5 |
| 2 | 5 | 0 | 1 | 3 | 7 |
| 3 | 7 | 7 | 4 | 6 | 4 |
| 4 | 0 | 4 | 2 | 3 | 0 |
| 6 | 1 | 2 | 3 | 1 | 2 |
| 9 | 4 | 8 | 5 | 7 | 0 |

புதிர் விடை

தம்மை ஒழுங்கு படுத்திக் கொண்ட சேரமான் ஒரு போர்வையை எடுத்துப் போர்த்தியபடி வெளியேறினார்.

அவர் நின்ற கோலமும் சென்ற கோலமும் பூஜியானுவோடு வாழ்ந்த காலத்தையேஅவருக்கு நினைவுபடுத்தின.

இந்த வேஷத்தில்தானே அவர் பூஜி யானுவைப் பலமுறை சந்தித்திருக்கிறார்?

சந்தடியற்ற வஞ்சி நகரத்தின் தெருக்களில் சிந்தனையற்ற ஒரு மனிதனின் காலடி ஓசை மட்டும் 'கிறீச் கிறீச்' சென்று கேட்டுக் கொண்டிருந்தது.

மாடந்துச் சாளரங்களில் இளம் தம்பதிகள் அரவணைத்துக் கொண்டு நிற்பதை அவர் காண முடிந்தது.

தவளைகளின் பாடல்களுக்குச் சில வண்டுகள் சுதி சேர்த்துக் கொண்டிருந்தன.

காற்றினால் வளைந்து ஆடும் மரங்களில் அடிக்கடி சிறகை அடித்துக் கொண்டு மாற்றி மாற்றி உட்காரும் பறவைகளின் ஒலி அவர் காதுகளுக்குக் கேட்டது.

தனது குதிரை வீரர்கள், கையிலே 'பாலா' ஏந்தி, சாலைகளில் உலாவிக் கொண்டிருப்பதை அவர் காண முடிந்தது.

கடற்கரைக்கு அவர் வந்து சேர்ந்த போது நங்கூரம் பாய்ச்சப்பட்ட பல நாட்டு நாவாய்களும் அங்கே ஆடி அசைந்து நின்று கொண்டிருந்தன.

சில கலங்களில் ஏராளமான திவட்டி வெளிச்சம் தெரிந்தது.

அயல் நாட்டினர் பலர் அங்கே ஆடிப் பாடிக் கும்மாளம் அடிப்பதை அவர் பார்த்தார்.

ஒரு கலத்தின் மேல் தட்டில் இறைச்சியும் மீனும் பதப்படுத்தப்படுவதைக் காற்று அள்ளிக் கொண்டு வந்து அவர் நாசியில் ஏற்றிற்று.

ஏராளமான நாவாய்களில் செருகப் பட்டிருந்த திவட்டிகள், கடலிலேயும் நட்சத்திரக் கூட்டம் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருப்பதைப் போல் அவருக்குக் காட்டின.

குடி வெறியில் சில யவனர்கள் சுதி இல்லாமல் பாடுவதையும், தொண்டை தாங்காத அளவு கத்துவதையும் அவர் அன்றைக்குத்தான் பார்த்தார்.

ஒரு கலத்திலிருந்து இன்னொரு கலத்திற்கு உணவுப் பொருள்கள் ஓடிக் கொண்டிருந்தன.

ஒவ்வொரு கலத்தின் பகுதிகளிலும் ஜாடிகளில் இருந்த நறவு வகைகள் கடலோடு போட்டியிட்டன.

சுறுசுறுப்பான தமது துறைமுகத்தை இரவு நேரத்தில் சேரமான் இப்போது தான் பார்த்தார்.

யாருக்கும் தெரியாதபடி அவற்றுக்கு வெகு தூரம் தள்ளி ஓரிடத்தில் அவர் வந்து அமர்ந்தார்.

அவருக்குச் சிறிது தூரத்தில் கடலோரமாக இரண்டு இளம் பெண்கள் கடலலையில் காலை நனைத்தவாறே சிரித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களை அடையாளம் கண்டு கொள்ள அவர் முயற்சி செய்யவில்லை.

கடல் மணலிலே கோலமிட்டவாறு அவர் சிந்தனைக் குழப்பத்தில் ஆழ்ந்திருந்தார்.

சிறிது நேரத்தில் "ஐயோ, ஐயோ!" என்று குரல் கேட்டது.

முழங்கால் அளவு தண்ணீரில் நின்று கொண்டிருந்த அந்தப் பெண்களை ஒரு பெரிய கடலலை உட்பக்கமாக இழுத்துச் செல்வதை அவர் கண்டார்.

சுற்று முற்றும் பார்த்துக் கைதட்டினார். குடித்துவிட்டு ஆடிக்கொண்டிருந்த யாருடைய காதிலும் அது விழவில்லை.

உடனே அவர் கரை மீதிருந்த ஒரு மீனவர் படகைக் கடலிலே தள்ளி அலையைக் கடந்து அந்தப் பெண்களைத் தேடத் தொடங்கினார்.

'நல்ல படகு யாரிடமாவது இருந்தால் சொல்லுங்களேன்!' என்ற கனவுப் பாடல் அவர் நெஞ்சில் எதிரொலித்தது.

கடலின் உள்ளலை அந்தப் பெண்களை வேகமாக இழுத்துச் சென்றது.

சேரமான் திக்குமுக்காடிப் படகைத் தள்ளினார்.

அடுத்த பேரலை அவரது படகையும் கவிழ்த்தது.

கடலில் புயல் உருவாகும் காலம் அது என்பதைச் சேரமான் அறியவில்லை.

சுழல்களுக்கிடையே அவர் நீந்தினார்.

அப்போதும் உயிரோடு அந்தப் பெண்களைக் காப்பாற்றி விடலாம் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது.

(தொடரும்)

1898
முதல் பிரசித்தி பெற்றது

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும்
பலத்திற்கும்

**ஆயுர்வேதாஸ்ரமம்**
பிரைவேட் லிமிடெட் - சென்னை-17.

## பிரபல திருமணம்



அக்கௌண்டென்ட் ஜெனரல் ஆபீஸ் பெங்களூர் ஆபீஸர் ரேஞர் ஸ்ரீ P. V. சுப்ரமணியன் M. A. அவர்களின் மூத்த குமாரன் சிரஞ்சீவி P. S. Deva Dutt. B. Com. (ஸ்டேட் பாங்க், மைசூர்)க்கும், ஸ்ரீ K. சந்தானம் B.A. அவர்கள் (அக்கௌண்ட்ஸ் ஆபீஸர்) மூத்த குமாரத்தி சௌ. **விஜயலக்ஷ்மி** B. A.க்கும், 1-12-76 அன்று பெங்களூரில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. மாலை வரவேற்பில் திண்டுக்கல் நடராஜன் அவர்கள் புல்லாங்குழல் கச்சேரி நடந்தது. முகூர்த்தத்துக்கும் வரவேற்புக்கும் பல பிரமுகர்களும், அதிகாரிகளும் உறவினர்களும் வருகை தந்து தம்பதிகளை வாழ்த்தினர். வாழ்க மணமக்கள்

கவிஞர் **கண்ணதாசனின்**
புதிய படைப்பு



# அவள் ஒரு இந்துப் பெண்
(முழு நாவல்)

மார்ச் முதல் தேதி
எல்லா ஊர்களிலும்
கிடைக்கும்

விலை
ரூ 1-50

ஏஜன்ஸிகளுக்கு முன்னதாக விண்ணப்பிக்கவும்

**காமதேனு பிரசுரம்**

4A, முத்துக் கிருஷ்ணன் தெரு,
தி. நகர் :: சென்னை-600017.

adma



## டில்லியில் திரைப்பட விழா

டில்லியில் ஆறுவது சர்வதேசத் திரைப் பட விழா கோலாகலமாக விக்யான் பவனில் ஜனவரி 3ந் தேதி செய்தித் துறை அமைச்சர் சுக்லாவால் தொடங்கி வைக்கப்பட்டது.

☐ ஐம்பத்தி நான்கு தேசங்களிலிருந்து சுமார் இருநூற்றைம்பது படங்கள் வந்திருக்கின்றன. டில்லியில் பன்னிரண்டு திரையரங்குகளில் பதினைந்து நாட்களில் இந்தப் படங்கள் காட்டப்படும்.

☐ கறுப்பு மார்க்கெட், 'ஏ' படங்களுக்கு அடிதடி போன்றவைகளை மிகவும் சாதுரியமாகச் சமாளித்து விட்டார்கள். எல்லாப் படங்களையும் 'ஏ' என்று அறிவித்துவிட்டார்கள். படங்களின் பெயர்களை அறிவிக்காமலேயே சீசன் டிக்கெட் விற்பனையைத் தொடங்கி விட்டார்கள். பொறுப்புள்ள அதிகாரிகளின் மேற்பார்வையில் ஒவ்வொரு தியேட்டரிலும் டிக்கெட்டுகள் விற்பனை நடந்தன.

☐ இருபத்தி நான்கு படங்கள் 'தங்க மயில்' பரிசுக்குப் போட்டி போடுகின்றன.

☐ ஜூரிகள் குழுவின் தலைவர் சத்யஜித் ரே. ''1952ல் திரைப்பட விழாவைப் பார்க்க வந்தேன். பல படங்கள் என்னைக் கவர்ந்தன. அதன் காரணமாகவே நான் திரைப்படத் துறையில் டைரக்டராக நுழையும் ஆர்வம் ஏற்பட்டது'' என்கிறார் ரே.

☐ விசேஷ அழைப்பினராகச் சுமார் நூற்றி இருபது திரை உலகப் புள்ளிகள் வெளி நாட்டிலிருந்து வந்துள்ளனர். இந்திய திரை உலகிலிருந்து சுமார் தொண்ணூறு பேர் பிரதிநிதிகளாக வந்துள்ளனர். இவ்வளவு பேரையும் வரவேற்று, உபசரித்து, படங்

களையும் காண்பித்து, சுற்றுலா நிகழ்ச்சிகளையும் ஏற்பாடு செய்து, அவர்களைத் திக்குமுக்காடச் செய்கின்றனர் செய்தித் துறை இலாகாவினர். பிரும்மாண்ட கல்யாணம் நடப்பது போல் இருக்கிறது.

□ மைக்கேலேஞ்சலோ அன்டானிஸோனி (இத்தாலி) குரசோவா (ஜப்பான்) ஆகிய பிரபல டைரக்டர்கள், ரன் ரன் ஷா (ஹாங்காங்) கிருஷ்ண ஷா (அமெரிக்கா) போன்ற தயாரிப்பாளர்கள், ஒலிவியா ஹஸ்ஸி (இங்கிலாந்து), சிஸிலி டைசன், ஜேம்ஸ் எர்ல் ஜோன்ஸ், டெபோரா ராஃபின், எல்லன் பர்ன்ஸ்டின் (எல்லோரும் அமெரிக்கா) போன்ற நட்சத்திரங்கள் விழாவுக்கு ஜொலிப்பூட்டினர்.

விழாவில் இது பரிசு பெற்றது... சாதாரணமாக இம்மாதிரி விழாக்களில் கலந்துகொள்ளாதவன். ஆனால் இந்திரா காந்தி என்னை அழைத்தார். ஆகவே வந்தேன்... ஒஷிமாவின் 'எம்பயர் ஆஃப் சென்ஸஸ்' படத்தை நான் பார்க்கவில்லை. மிகவும் ஆபாசமான படம் என்கிறார்கள்.

**கிருஷ்ண ஷா:** இந்தியாவுடன் கூட்டாக ஒரு படம் தயாரிக்கப் போகிறேன். மூன்று இந்திய நட்சத்திரங்கள், மூன்று அமெரிக்க நட்சத்திரங்கள் இருப்பார்கள். கர்நாடக மாநிலத்தில் ஷூட்டிங். ஹிந்தி மொழி. படத்தில் பாட்டு, டான்ஸ் எல்லாம் இருக்







□ பத்திரிகைகளுக்கு அளித்த பேட்டிகளில் இவர்கள் சுவையான பல கருத்துக்களைக் கூறினர்.

**அன்டானிஸோனி:** எழுத்தாளனாக ஆக முயன்றேன். அதில் எனக்குத் திறமை இல்லை என்பதை அறிந்து கொண்டேன். ஆகவே டைரக்டராகி விட்டேன். வாழ்க்கையில் 'செக்ஸ்' என்பது பற்றித் தெரியும். படத்தில் செக்ஸ் பற்றித் தெரியாது. 'பாசஞ்சர்' என்ற படத்தின் கடைசிக் காட்சி திரையில் ஏழு நிமிஷங்கள் ஓடுகின்றது. அதை எடுக்கப் பதினேழு நாட்கள் பிடித்தன.

**குரேசோவா** ('ரோஷமான்' புகழ்): ரஷ்யா கேட்டுக் கொண்டதன் பேரில் அங்கு போய் டெரு உஜாலா படத்தை 1975ல் எடுத்தேன். இருபது வருடங்களாக என் மனத்தில் வைத்திருந்த கதை. மாஸ்கோ பட

இடது பக்கம்: ○ விழா நுழை வாயிலில் மலர் அலங்காரம் ○ பேரி லின்டன் (பிரிட்டிஷ் படம்) ○ ஷெர்லாக் ஜோன்ஸும் அவர் நாயும் ○ ரன் ரன் ஷா. வலது பக்கம்: ○ ஃபிரீ ஃபார் ஆல் (அர்ஜென்டீனா படம்) ○ யம் யம் ஷா (ஹாங்காங்) ○ விழா மேடை. (வலக் கோடியில் சுக்லா, ரே)



பம்பாயில் சோர் பஜார் என்று ஒரு பகுதி. அங்கு கடைகளில் என்ன வேண்டுமானாலும் கிடைக்கும் என்று சொல்வார்கள். சமீபத்தில் ஒருவர் தம் கார் முன் சக்கர ஹப்-கேப்பைத் தொலைத்து விட்டார். அதே மாதிரி ஹப்-கேப் புதிதாக கிடைக்கவில்லை. சோர் பஜாருக்குப் போய்க் காரை நிறுத்திவிட்டு ஒரு கடையில் கேட்டார். இதோ கொண்டு வருகிறேன் என்று சொல்லிவிட்டுப் போன பையன் பத்து நிமிடத்தில் அவர் காருக்குப் பொருத்தமான ஒரிஜினல் ஹப்-கேப் ஒன்றைக் கொண்டுவந்தான். பேரம் பேசி ஒரு விலை கொடுத்து அதை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தார். ஷெட்டில் காரை நிறுத்தி விட்டுப் பின்னால் வந்து பார்த்தபோது பின் சக்கரம் ஒன்றின் 'ஹப்-கேப்'பை காணவில்லை! - சண்டே - மானி

---

கும். ஆங்கிலப் பதிப்பில் இருக்காது. தலைப்பு: 'ஷாலிமார்'.

☐ சில குறிப்பிடத் தக்க படங்கள்:

**சைலண்ட் மூவி**: நொடித்துப் போய்க் கொண்டிருக்கும் ஸ்டுடியோவுக்குப் புத்துயிர் அளிக்க ஒரு சைலண்ட் மூவி (பேசாத படம்) எடுக்க மூன்று பேர் வருகின்றனர். பெரிய பெரிய நட்சத்திரங்களைப் போட்டுப் படமும் எடுத்து விடுகிறார்கள். போட்டிக் கம்பெனிக்காரர்கள் படம் திரையிடும் தினத்தன்று பிலிம் பெட்டியை அபேஸ் பண்ணிக் கொண்டு போய்விடுகிறார்கள். அதை மறுபடியும் மீட்டுப் படத்தைப் போடுகிறார்கள். பிரமாதமான வெற்றி கிடைக்கிறது.

நூற்றுக்கு நூறு நகைச்சுவைப் படம். பேச்சே கிடையாது. வசனங்களை யாரும் பேசவில்லை. தேவையானபோது திரையில் காட்டி விடுகிறார்கள். பிரபல 'மைம்' நடிகர் மார்சல் மார்சோவைப் படத்தில் நடிக்கும் படி கேட்கிறார்கள். அவர் 'முடியாது' என்று சொல்கிறார். இந்த ஒரே ஒரு வார்த்தைதான் படத்தில் உச்சரிக்கப்படும் வசனம். விழுந்து விழுந்து சிரிக்க வைக்கும் படி எடுத்திருக்கிறார்கள். அமெரிக்க டைரக்டர் மெல் ப்ரூக்ஸ் அசகாய சூரர்!

**எனிக்மா ஆஃப் காஸ்பர்**: மேற்கு ஜெர்மனியின் படம். இருபது ஆண்டுகள் மனிதர்களையோ வெளிச்சத்தையோ பார்க்காதபடி வளர்க்கப்பட்ட ஒருவன், வெளி உலகுக்கு வந்தால் என்னென்ன பிரச்னைகள் வரும்? மனத்தை உருக்கும் கதை. அபாரமான நடிப்பு. பாவம், பேச முடிந்தும் வார்த்தைகள் தெரியாத அவலம், நல்லவை — கெட்டவை பாகுபாடு புரியாத பரிதாபம். நெருப்பு சுடும் என்பது போன்ற அற்ப விஷயங்கள் கூட அறியாத அப்பாவித்தனம்— இது போன்ற பல இடம் பெற்றுள்ளன இப்படத்தில். பாக்ஸ் ஆபீஸ் பற்றி இலட்சியம் பண்ணாதவர்தான் இப்படிப்பட்ட கதைகளைப் படமாக உருவாக்க முடியும்.

**எவரெஸ்டில் ஸ்கீ பண்ணியவர்**

நினைத்துப் பார்க்க முடியாத காரியம். உண்மையிலேயே ஒருத்தர் அப்படிப் பனியில் சறுக்கினாராம். அவர் எழுதி வைத்த குறிப்புக்களே திரைக் கதை. கானடா நாட்டின் அபார டாக்குமெண்டரி இது. முழு நீள திரைப்படம் மாதிரி எடுத்திருக்கிறார்கள். மயிர்க்கூச்செறியும் பல இடங்களில், மனிதன் இப்படிப்பட்ட சாதனைகளால்தான் உயருகிறான் என்பதை அறிவுறுத்துகிறது இந்தப் படம்.

**டெத் ஆஃப் இபு**

அனாதைச் சிறுவன். அவனுக்கு மற்றோர் அனாதைக் கிழ நண்பன். இவர்களைச் சுற்றி அமைக்கப்பட்ட துடிப்புள்ள கதை. எதிரி நாட்டு ராணுவத்தினரிடம் ஒப்படைக்க ஒரு 'பலி ஆடு' தேவைப்படும்போது இபு கிழவனை நாடுகிறார்கள். தியாகம் செய்ய முன்வருகிறான். ஆனால் தன் உறவினர்களுக்கெல்லாம் பணம், நிலம் முதலிய கேட்கிறான். போட்டி போட்டுக் கொண்டு கொடுக்க ஒத்துக் கொள்கிறார்கள். ஒரு 'பலி ஆடு' தரப்படாவிடில் தாங்கள் யாவரும் பலியாக வேண்டும் என்பது அவர்களுக்குத் தெரியும். தேள் கொட்டுவது போல் மனத்தில் தைக்கும்படி படத்தை முடித்திருக்கிறார்கள்.

அந்த அனாதைச் சிறுவன், அடடா! என்ன அழகு! என்ன கவர்ச்சி! என்ன சுய நம்பிக்கையான நடிப்பு! (இப்படம் பரிசு பெற்றால் வியப்பதற்கில்லை.)

**இரண்டு சிரிப்புப் படங்கள்:**

**ஷெர்லாக் ஜோன்ஸ்** (ஹாலந்து): சரியான துப்பறியும் சாம்பு இவர்! வைரம் ஒன்று திருடு போகாமல் காப்பாற்ற வேண்டும். ஜோன்ஸ் ஏமாந்து விடுகிறார். அவரது நாய் சமயத்தில் கை கொடுக்கிறது. ஜோன்ஸுக்குப் பாராட்டு, புகழ். தமாஷாக எடுத்திருக்கிறார்கள்.

**சார்லெட்டுடன் தூங்குவது எப்படி?**

கல்யாணமானாலும் சபலம் போகிறதா? சார்லெட்டின் மேல் ஒரு கண். அவளுடன் சற்றுத் தமாஷாகக் கழிக்க ஒரு குடும்பஸ்தர் என்ன பாடுபடுகிறார்! வெண்ணெய் திரண்டு வரும்போது பானை உடைந்து விடுகிறது. சரியான பிரெஞ்சு காமெடி இது.

☐ விழாவில் இடம் பெற்றுள்ள எல்லாப் படங்களைப் பற்றியும் எழுத முடியாது. ஆனால் ஆஸ்திரேலிய நாட்டுப் படமான ஃபான்டஸம் பற்றிக் குறிப்பிட்டு ஆக வேண்டும். இந்த மாதிரி ஆபாசப் படம் எடுத்ததால் அந்த நாட்டுக்கு என்ன பெருமை அல்லது புகழ் கிடைக்கும் என்று தெரியவில்லை. கிளாக் வொர்க் ஆரஞ்சு, ஐ ஆம் க்யூரியஸ்யெல்லோ, லாஸ்ட் டாங்கோ இன் பாரீஸ் போன்றவை மெழுகுவர்த்தி என்றால் இது டவரிங் இன்ஃபெர்னோ. மனித மூளையின் வக்ரங்களைப் பற்றி வேண்டுமானால் இந்தப் படத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். நல்ல காலம், இப்படத்தை விழாவிலிருந்து எடுத்து விட்டார்களாம்.

— நமது விசேஷ நிருபர்



# அவன் ஒரு சரித்திரம்



சுவையே இல்லாமல் பெரிதாகக் கதை அளந்திருக்கிறார்கள். ஓர் ஐ.ஏ.எஸ். அதிகாரியாகிவிட்ட கதாநாயகன் சங்கர், தன் இலாகாவில் தர்ம நியாயமான வேலைக்கு இடம் இல்லை என்று அறிந்து மனம் வெதும்பி வேலையை ராஜிநாமாச் செய்து விடுகிறானும்! ராஜிநாமாச் செய்தவன் புத்திசாலித்தனமாக ஏதாவது தொழில் செய்யப்படாதோ? ஒரு பத்திரிகை ஆரம்பிக்கிறானும்! அது பல்லாயிரக் கணக்கில் செலவாகிறதாம்! (யாரிடம் கதை விடுகிறார்கள்?) சங்கரின் மாமன் மகள் கல்பனா டாக்டருக்கு மேல் நாட்டில் படித்துவிட்டு வந்து சங்கரின் பத்திரிகைத் தொழிலுக்கு வலது கையாக இருக்கிறாளாம்! (என்ன அசட்டுத்தனம்!) சங்கருக்காகவே வளர்ந்து வந்த கோமதியை டூயட் பாட்டு, கனவுக் காட்சிகளோடு நிறுத்திவிட்டார்கள்! சங்கரின் வலது கை கல்பனாவை லாரி விபத்தில் சாக அடித்து விட்டார்கள். (கடைசியில் சங்கரைக் கொல்லச் சதிகாரர்கள் போடும் லாரிகள் சண்டை பிதற்றலான கற்பனை.) டாக்டர் கல்பனா இறக்கும் தறுவாயில், சங்கர் தம்பி முரடன் முத்துவை நல்லவனாக்கி விட்டாளாம்! பாவம் சங்கர்! 'அம்போ' வென்று நடுத் தெருவில் நின்று விட்டான்.

ஒருவருடைய நிலத்தைச் சர்க்கார் ஆஸ்பத்திரி கட்ட ஆர்ஜிதம் செய்தால், அந்த நிலத்தின் உரிமையாளரிடம் கேட்கவே மாட்டார்களோ? எடுத்த எடுப்பிலேயே ஆர்ஜிதச் செய்தியைக் கெஜட்டில் போட்டு விடுவார்களோ? சங்கர் என்னதான் கடமையில் கருத்துள்ளவன் என்றாலும், தன் தந்தை தம் உயிருக்கும் மேலாகக் கருதிப் போற்றி வந்த ஒன்றை அவருடன் ஒரு வார்த்தை கலந்து ஆலோசிக்காமலேயா அரசுக்கு உரிமையாக்கி விடுவான்? (முட்டாள்தனமாயிருக்கிறதே!)

சங்கர் கலெக்டராயிருந்தபோது ரயில்வே பாலத்தைத் தகர்க்க அயோக்கியர்கள் வெடிகுண்டு வைக்கப் போவதாகத் தகவல் வந்ததும், தன்னந் தனியாக அவர் மட்டும் அந்தப் பாலத்தை நோக்கி ஓடுகிறாரே, ஒருவேளை தாம் கதாநாயகன், எத்தனை பேர் வந்தாலும் சுண்டுவிரலில் கூடக் காயம் படாமல் 'டிஷ்யூம் டிஷ்யூம்' என்று தீர்த்துக் கட்டிவிட முடியும் என்ற தைரியத்தினாலா? இந்த மாதிரி தகவல் வந்ததும் ஒரு போலீஸ் படையை அல்லவா அனுப்பி வைக்க வேண்டும்?

சிவாஜி கணேசன், ஸ்ரீகாந்த், வி. கே. ராமசாமி, கே. ஏ. தங்கவேலு, மேஜர் சுந்தரராஜன், டி. கே. பகவதி, மஞ்சுளா, காஞ்சனா, மனோரமா, எம். பானுமதி முதலானோர் நடித்திருக்கின்றனர். அபாரமாக நீந்தும் மீன்கள் கூட நீருள்ள குளத்தில் தானே நீந்தும்? வறண்ட குளத்தில் நீந்துமா?

டி. எம். சௌந்தரராஜன், பி. சுசீலா பாடும் ''வணக்கம் பலமுறை சொன்னேன்'' என்ற கவியரசு கண்ணதாசனின் பாடல் அற்புதமாக ஒலிக்கிறது.

ஒளிப் பதிவு டைரக்டர் ஏ. வின்சென்ட் தம் கைவண்ணத்தை நன்கு பதிவு செய்திருக்கிறார். டைரக்டர் கே. எஸ். பிரகாஷ் ராவைத் திரைக் கதை சதிசெய்து விட்டது!

''அவன் ஒரு சரித்திரம்'' — அபத்தமான கதை என்ற முறையில் ஒருவேளை சரித்திரம் சமைக்கலாம்.

—காந்தன்

# சிலம்புச் செல்வம்

ம.பொ.சி

கற்புக் கடம் பூண்ட தெய்வமான கண்ணகி தேவியை அடைக்கலம் பெற்ற மாதரியானவள் எல்லையற்ற இன்பத்தை இதயத்திலே நிறைத்தவளாகி, கண்ணகியுடனும், கோவலனுடனும் ஆயர் சேரியிலுள்ள தனது இல்லத்தை அடைந்தாள்.

அங்கு தன் மகள் 'ஐயை' என்பாளைக் கண்ணகிக்கும் கோவலனுக்கும் அறிமுகப்படுத்தினாள். அணிகலன்களின்றியும் அலங்கரித்துக் கொள்ளாமலும், நாடு விட்டு நாடு பெயர்ந்து வந்த கண்ணகியின் நிலையைக் கண்டு ஆய்ச்சியர் வருந்தினர். அவளை அன்போடு பார்த்து, ''இனி கவலையை விட்டு, மகிழ்ச்சியுடன் எங்கள் மனையில் இருங்கள்'' என்று ஆறுதல் மொழி புகன்றனர். ஐயையைப் பார்த்து,



''சாவக நோன்பிகள் அடிகள் ஆதலின்,
அடிசில் ஆக்குதற்கு அமைந்தநற் கலங்கள்
நெடியாது அளிமின்!''

என்று மாதரி கூறினாள். கோவலனைச் ''சாவக நோன்பினன்'' என்று மாதரி கூறியது, சமணன் என்று கருதியதனால். இந்தக் கூற்று கோவலனுடைய சமயத்தை அவள் நன்கு அறிந்திருந்தாள்என்பதைக் காட்டுவதாகாது. சமணத் துறவியான கவுந்தியடிகளுடன் கோவலன் வந்ததால் அவனும் சமணனாகத்தான் இருக்க வேண்டும் என்று மாதரி கருதிவிட்டாள் என்றே கொள்ள வேண்டும்.

மாதரியின் ஆணைப்படி, சமைத்தற்குரிய பாத்திரங்களும், அரிசி, பால், நெய் — காய்கறி ஆகிய பண்டங்களும் கண்ணகிக்கு அளிக்கப்பட்டன. அவற்றைப் பெற்ற கண்ணகி தன் மெல்லிய விரல்கள் சிவக்கும் வண்ணம் கறிகாய் வகைகளை அரிவாள் மணையிலே இட்டு அரிந்தாள். அவளுடைய அழகிய முகம் வியர்த்தது. செவ்வரி படர்ந்த கண்கள் சிவந்தன. ஐயையின் துணையோடு ஒருவிதமாக உணவு சமைத்து முடித்தாள்.

மென்மையான பனை ஓலையால் பின்னப்பட்ட தடுக்கைப் போட்டு, அதன் மீது கோவலன் அமரச் செய்தாள். பின்னர், சுட்ட மண் பாத்திரத்திலே நிரப்பிய நீரைச் சொரிந்து, தன் கணவனின் பாதங்களைக் கழுவினாள்.

தண்ணீரைத் தெளித்து, தன் கையாலேயே தரையைத் தடவி, அதன் மேல் வாழையின் குருத்திலை விரித்துப் போட்டு, அந்த இலையின்கண் உணவினைப் படைத்து, கணவனை உபசரித்தாள். பல்லாண்டு பிரிந்திருந்த கணவன் திரும்பவும் தன்னை அடைந்த பின் அவனுக்குத் தன் கையால் சமைத்துக் கண்ணகி போடும் முதல் சோறு இதுதான். இதைக் கண்டு நிலமகள் மயக்கமடைந்து மூர்ச்சித்து விட்டாளாம்! ஆம்; இதுவே கண்ணகி போடும் கடைசிச் சோறு என்பதை அவள் அறிவாளல்லவா! அவளும் பெண்ணாதலால் கண்ணகிக்கு நேரவிருப்பதை நினைந்து மயக்கமடைந்து விட்டாள்.

கண்ணகி தண்ணீர் தெளித்துத் தரையை மெழுகியதானது, மண்மகளின் மயக்கத்தைத் தெளிவிப்பது போன்று இருந்தது என்று வருணிக்கிறார் இளங்கோ வடிகள்.

மண்ணக மடந்தையை
மயக்கு ஒழிப்பனள்போல்
தண்ணீர் தெளித்துத்
தன் கையால் தடவிக்
குமரி வாழையின்
குருத்தகம் விரித்து — ஈங்கு
'அமுதம் உண்க
அடிகள்! ஈங்கு' என.

கண்ணகி படைத்த உணவை நன்கு சுவைத்து உண்டான் கோவலன். அறுசுவை உணவருந்தி ஒரு திங்கள் ஆகிவிட்டதல்லவா! அவன் கடைசியாக அறுசுவை உண்டது மாதவி இல்லத்தில்தானே!

கோவலன் தன் பத்தினியை மறந்து மாதவி இல்லத்தில் பல்லாண்டுகள் வாழ்ந்த குறையுடையவன் என்றாலும், வருணாசிரம நெறிகளில் நம்பிக்கையுடையவன்.

மாதரி இல்லத்தில் கண்ணகி படைத்த உணவை உண்ணத் தொடங்கு முன் வணிக வருணத்தினருக்குரிய வைதிகச் சடங்குகளை அவன் நிறைவேற்றியதாக அடிகள் கூறுகின்றார். இதனை,

'' அரசர் பின்னோர்க்கு அருமறை மருங்கின்
உரிய வெல்லாம் ஒருமுறை கழித்து''

என்னும் வரிகளால் அறிய முடிகிறது.

(தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து.)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# சத்துமிகுந்த, சுவையான
# பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்

## வளரும் குழந்தைகளுக்கு
## சுவையான துணை

பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் அருமையான தனிச் சுவையோடு மேம்பட்டு விளங்குவது ஏன்? சத்துச் செறிந்த ஆரோக்கியமான குணச்சிறப்பே காரணம். ஆசையோடு குழந்தைகள் அவற்றை விரும்பிச் சுவைத்து வளருகின்றனர்! பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்— வளரும் குழந்தைகளுக்குச் சுவையான துணை.




**பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை**

லின்டாஸ்-BBC.GLX 6-140 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு

# பணத்தை மிச்சப்படுத்த நீங்கள் இப்படி நேரத்தை வீணுக்க வேண்டாமே!



முடிவில்லாமல் நீண்டிருக்கும் க்யூ வரிசையில் காத்துக் கிடப்பதால் உங்களுக்கு என்ன பயன்? ஒரு சுவேகா மோபெட்டின் துணையுடன் நேரத்தை வீணுக்காமல் காப்பதோடு உங்கள் செலவையும் — பஸ் பிரயாணத்திற்காக செய்வதை விட — குறைக்கலாமே!

**சுவேகா — ஒரே லிட்டரில் அறுபது கிலோ மீட்டர்கள்! பஸ்ஸைவிட சிக்கனமானது.**

யோசித்துப்பாருங்கள், உங்கள் சுவேகா மோபெட் ஒரே லிட்டர் பெட்ரோலில் உங்களை அறுபது கிலோ மீட்டர்கள் கொண்டு செல்கிறது. கிடைக்கும் சவாரியோ உல்லாசமானது! இனி நீங்கள் நிரம்பி வழியும் பஸ்ஸில் நெருக் கடியில் இடிபட்டு, மூச்சுத் திணறி அவதியுற அவசியமில்லை. வாடகை வண்டிகளுக்கும் சக்திக்கு மீறிய வாடகையைக் கொடுக்க வேண்டியதில்லை.

அதுமட்டுமா? உங்கள் சுவேகா தனது சிறந்த பிக்-அப், உறுதியான எஃகு வடிவமைப்பு மற்றும் செயின் ட்ரைவ் ஆகியவற்றின் துணை கொண்டு உங்களுக்கு சீரான வேகத்துடன் கூடிய சிறந்த ஓட்டத்தை அளிக்கிறது. ஹார்ட் க்ரோம்ட் அலுமினியம் சிலிண் டர்கள் கொண்ட ஒரே மோபெட் சுவேகா மட்டுமே. ஆச்சரியமென்ன பின், உங்கள் சுவேகா அயராது உழைப்பதில்!

உம், தயங்காதீர்கள். விரை விலேயே உங்கள் வாழ்வில் சுவேகாவின் சுகம் மலரட்டும். அது மிகவும் சிக்கனமானது (பராமரிப்பிலும் கூட).

## பயணச் செலவைக் குறைக்க இதோ ஒரு சிறந்த வழி!




# Suvega

**சுவேகா - இந்தியாவில் மிகவும் அதிகம் விற்பனையாகும் மோபெட்**



**மோபெட்ஸ் இந்தியா லிமிடெட்
திருப்பதி, ஆந்திர பிரதேசம்**

டீலர்கள் : ● M/s. மோபெட்ஸ் இந்தியா லிமிடெட், நெ. 1, V. பழனி சுவாமி நாயுடு தெரு, அவனாசி ரோடு, கோயமுத்தூர்-18 ● M/s. லக்ஷ்மி ஏஜன்ஸீஸ், P. B. No. 73, 2. C/3, புரோமனேட் ரோடு, கண்டோன்மெண்ட், திருச்சி-620 001 ● M/s. லக்ஷ்மி ஏஜன்ஸீஸ், 174-E, வடக்கு வெளி வீதி, மதுரை ● M/s. குமார் ஏஜன்ஸீஸ், 30, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு, மவுண்ட் ரோடு, சென்னை-600 002 ● M/s.